# குழந்தைக்கு மிகவும் சிறந்தது தாய்ப்பால்.

முலைப்பால் குழந்தைக்கு மிகவும் சிறந்தது—ஏன்? தூய்மையானது, கிருமிகளற்றது, குழந்தையின் ஜீரண முறைக்கு நூற்றுக்கு நூறு உகந்தது—தாய்ப்பால். பலவித நோய்களையும் எதிர்க்கும் சக்தியை அளிக்கிறது தாய்ப்பால். குழந்தைக்கு அன்பான உணர்வும் பாதுகாப்பும் கிடைக்க உதவுகிறது. தாய்ப்பால் குடிக்கும் குழந்தைக்கு வாய்வு நோய்கள், சரும நோய்கள் ஏற்படுவது மிகவும் அரிது.

3 மாதம் ஆனபின், டாக்டர்கள் ஃபாரெக்ஸ் சிபாரிசு செய்கிறார்கள் குழந்தைக்கு திட உணவைத் துவங்குவதற்கு தனிப்படத் தயாரிக்கப்பட்டது—ஃபாரெக்ஸ். இதில் புரதம், கார்போஹைட்ரேட், கொழுப்பு, கால்ஷியம், பாஸ்பரஸ் வைட்டமின்கள் உள்ளன. இரும்புச் சத்தும் ஏராளம் அடங்கியது—ஃபாரெக்ஸ். ஆகவே, குழந்தையின் முழு வளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு—ஃபாரெக்ஸ்.




**டாக்டர்கள் சிபாரிசு செய்வது ஃபாரெக்ஸ்**

**குழந்தையின் விரைந்த முழுவளர்ச்சிக்கு உன்னதமான திட உணவு**

# 'சிக்'கென்று இருக்க...

உங்கள் உடம்பு அசைந்து கொண்டிருப்பதற்காக ஏற்பட்டது. காரியாலயத்தில் பல மணி நேரம் நாற்காலியை விட்டு நகராமல் பணியாற்றுவது தசைகளை இறுகச் செய்யும். களைப்பு ஏற்படும். இந்தத் தேகப் பயிற்சிகள் பல தசைநார்களை சுருக்குவித்தும் தளர்த்தியும் விடுவதால் வேலைக்கு இடையே சில நிமிஷங்களை இவற்றுக்கு ஒதுக்குவது நல்லது. உடல் மட்டுமின்றி மூளையும் சுறுசுறுப்படையும்.



**நீள்மூச்சு**

உடலைத் தளர்த்தி நிமிர்ந்து அமரவும். கால்கள் இயற்கையான நிலையிலிருக்கக் கைகளைத் தொடைகள் மீது வைக்கவும். நீள மூச்சை உள்ளுக்கு இழுத்து நுரையீரல்களை நிரப்பவும். மூன்று எண்ணும் வரை மூச்சை அடக்கிப் பிறகு நுரையீரல் முற்றிலும் காலியாகுமாறு எல்லாக் காற்றையும் வெளியேற்றவும். இப்படி மூன்று முறை.



**தலையை உருட்டு**

நாற்காலியின் கரங்கள் மீது கைகளை வைத்துக் கொள்ளவும் தலையை உருட்டி முகவாய் இடது தோளைத் தொடச் செய்யவும். பின் தலையைப் பின்னுக்குச் சாய்த்து உருட்டி முகவாய் வலது தோளைத் தொடச் செய்யவும். இப்படி இரண்டு தடவை.



**தோள்கொடுப்போம்**

விரல்களைக் கோத்துக் கொண்டு தொடைகள் மீது வைக்கவும். உள்ளங்கைகள் மேல் நோக்கி இருக்க வேண்டும். தோள்களை இலேசாகச் சரிய விடவும். தோள்களை முன்புறமாக முதலில் உருட்டவும். பிறகு பின்புறமாக. இரு திசைகளிலும் ஐந்து ஐந்து தடவை.



**இடுப்பைக் கவனி!**

மேஜையிலிருந்து நாற்காலியைப் பின்னுக்குத் தள்ளிக் கொள்ளவும். கழுத்துக்குப் பின்னால் விரல்களைக் கோத்துக் கொள்ளும்போது முழங்கைகள் முன் பக்கம் நேராக நீண்டிருக்க வேண்டும். இப்போது குனிந்து தலையால் முழங்கால்களைத் தொட வேண்டும். குனியும்போது மூச்சை விடவும் நிமிரும்போது உள்ளுக்கு இழுக்கவும். மூன்று தடவை.



**சுழற்று! சுழற்று!**

இரு மணிக்கட்டுகளையும் தளர்த்தவும். முதலில் வலமாகவும் பிறகு இடமாகவும் சுழற்றவும். இரு பாதங்களையும் தரையிலிருந்து நாலு அங்குலம் உயர்த்திக் கணுக்கால்களை முதலில் வலமாகவும் பிறகு இடமாகவும் சுழற்றவும்.



**முழங்கால் போராட்டம்**

பாதங்களை ஆறு அங்குல இடைவெளியில் ஊன்றவும். முன்புறம் சாய்ந்து உள்ளங்கைகளை எதிர் எதிர் தொடைகளின் உட்புறம் ஊன்றவும். முழங்கால்களை இணை சேர்க்க முயலும்போதே அவற்றை உள்ளங்கைகளால் பிரியச் செய்யவும். ஆறு எண்ணி முடிக்கும் வரை இப்படி இருந்து பிறகு அடுத்த பயிற்சி.



**வணக்கம்! வணக்கம்!**

வணக்கம் கூறுவது போல் உள்ளங்கைகளைச் சேர்த்து வைக்கவும். நீள மூச்சை உள்ளுக்கு இழுத்து அதே சமயம் உள்ளங்கைகளை ஆறு எண்ணிமுடியும் வரை ஒன்றன் மீது ஒன்றாக அழுத்தவும்.

**எச்சரிக்கை!**

சாப்பிட்டு அரை மணி நேரம் வரை இந்தப் பயிற்சிகளைச் செய்யக் கூடாது!

நன்றி: நமஸ்கார் (ஏர் இந்தியா பத்திரிகை)



○ காரைக்குடியில் கம்பன் திருநாள் கொண்டாட்டத்தில் பங்கு பெற வந்த கல்கி, டி. கே. சி, ராஜாஜி ஆகியோருடன் சா. கணேசன்.

# கம்பனுக்கு ஒரு பாஸ்வெல்

அ. ச. ஞானசம்பந்தன்

டாக்டர் ஜான்சன் என்ற ஆங்கிலேய அறிஞனுக்கு உற்ற நண்பனாக, பாஸ்வெல் என்ற அன்பர் ஒருவர் இருந்தார். டாக்டர் ஜான்சனின் வாழ்க்கையையும் அவருடைய எண்ண ஓட்டங்களையும் பாஸ்வெல் எழுதி வைத்தார். பாஸ்வெல் ஜான்சனுடன் ஒரே காலத்தில் கூடவே வாழ்ந்தார். ஒருவருடன் சமகாலத்தில் அவர் கூடவே வாழாமல், ஆயிரத்து நூறு ஆண்டுகள் கழித்து வாழும் ஒருவர் அவரைப் பற்றி, பாஸ்வெலைப் போல எழுதவோ, பேசவோ முடியுமா? முடியும் என்று காட்டினார் இந்த இருபதாம் நூற்றாண்டில் நம்மிடையே வாழ்ந்து சில நாட்களுக்கு முன்னர் மறைந்த ஒரு பாஸ்வெல்.

அன்று வாழ்ந்த அறிஞன் கவிச்சக்கரவர்த்தி கம்ப நாடன். அவனுக்குப் பின் ஆயிரத்து நூறு ஆண்டுகள் கழித்து வாழ்ந்த பாஸ்வெல்தான் 'கம்பன் அடிப்பொடி' என்று தம் பெயரை மாற்றிக் கொண்ட அன்பர் சா. கணேசன். நண்பர்களால் 'சா.க.' என்று அழைக்கப்பட்ட இவர் தம் வாழ்நாளில் பெரும் பகுதியைக் கம்பனுக்காகவே செலவழித்தார். காரைக்குடியில் கம்பன் கழகத்தைத் தோற்றுவித்துக் கம்பன் விழாவைஆண்டுதோறும் நடத்தி வந்ததைப் பலரும் அறிவர். ஆனால் கதாகாலட்சேபத்துக்கு மட்டும் பயன்பட்டு வந்த கம்பனது இராமாயணத்தைப் புலவர்கள், அறிஞர்கள் மத்தியில் உலவ விட்டவர் சா.க.

கப நாடனுடைய காலம் கி.பி.1ம் 2ம் நூற்றாண்டு என்றுதான் புலவர் உலகம் நினைத்து வந்தது. திரு வையாபுரிப் பிள்ளை, திரு ஏ. சி. பால் நாடார் முதலியவர்களுடன் சேர்ந்து ஆய்வுரை செய்து அவனுடைய காலம் கி. பி. 9ம் நூற்றாண்டு என்று முடிவு கூறியவர் சா. க. அத்துடன் நில்லாமல் பங்குனி அத்த நாளில்தான் இராம காதை அரங்கேறிற்று என்றும் கூறியவர் சா. க. கம்ப நாடன் வெறும் கதை பொதி பாடல் இயற்றியவன் அல்லன் என்றும், அவன் அறியாத கலைகளோ அன்றைய விஞ்ஞான அறிவோ எதுவும்இல்லைஎன்றும் கண்டு கூறியவர் கம்பன் அடிப்பொடி. 'அணுவினைச் சத கூறிட்ட கோணிலும் உளன்' என்ற பிரகலாதன் கூற்றை வைத்துக் கொண்டு கம்பன் கண்ட விஞ்ஞானம் பேசியவர்.

அவனுடைய கவிதையில் நுழைந்து மிகப் பெரிய ஆராய்ச்சிகள் செய்து அவற்றை எழுதியும் வைத்துள்ளார். கலி விருத்தம் என்ற ஒரே வகைப் பாடலில் 40 விதமான சந்த அமைப்பைக் கவிச் சக்கரவர்த்தி பயன்படுத்தியுள்ளான் என்பதையும் கண்டு கூறினவர் அவர்தாம். இசைத் துறையில் பயிற்சி இல்லாதவராயினும்' எத்தனை வகையான இசை வேறுபாடுகள் கம்பன் கவிதையில் உண்டு என்பதையும் ஆராய்ந்து எழுதி வைத்துள்ளார்.

கம்பன் பாடல்களை மட்டும் வைத்துக் கொண்டு ஒரு முழுநேர நாட்டியக் கச்சேரிக்கு ஏற்பாடு செய்து முதன் முதலில் அதனை அரங்கேற்றியவர் அவரேயாவார்.

ஆங்கில இலக்கிய மேடைகளில் மட்டுமே உலவி வந்த 'விவாத அரங்கை'ப் பட்டி மண்டபம் என்ற பெயருடன் தமிழ் இலக்கிய உலகில் முதன் முதலாகப் புகுத்திய பெருமை காரைக்குடி கம்பன் கழகத்துக்கே உண்டு. இன்று பட்டி தொட்டிகளிலெல்லாம் பட்டி மண்டபம் என்ற பெயரில் ஏதேதோ நடைபெறக் காண்கிறோம். மெத்தப் படித்து எல்லாவற்றையும் விட்டு விட்ட

புகைப்படம்: சுந்தரம் ஸ்டுடியோ
உதவி: குன்றக்குடி பெரிய பெருமான்

தாகப் பறைசாற்றிக் கொள்பவர்கள் கூட 'கற்பில் சிறந்தவள் சீதையா கண்ணகியா?' என்பன போன்ற தலைப்புக்களில் பட்டி மண்டபம் போடக் காண்கிறோம். இத்தகைய அவல நிலை ஏற்படாமல், தரம் ஒரு சிறிதும் குறையாமல் பட்டி மண்டபம் நடத்தியவர் சா. க. இதனை அடுத்து வழக்காடு மன்றங்களைப் புகுத்தியவரும் அவரேயாவார்.

கம்பனில் ஈடுபடத் தொடங்கியவுடன் அவன் நூலை நன்கு அனுபவிப்பதற்காகவே சிற்பக் கலை, கட்டிடக் கலை, கோயில் கட்டும் கலை முதலியவற்றில் ஈடுபடலானார். கல்வெட்டிலும் புகுந்து நல்ல முறையில் ஆராய்ச்சிகள் செய்துள்ளார். கம்பன் என்ற கவிச் சக்கரவர்த்தி தமிழ் இலக்கிய உலகில் தனித்துத் தோன்றியவன் அல்லன். இரண்டாயிரம் ஆண்டுகளாக இடைவிடாமல் ஆற்றொழுக்குப் போல வளர்ந்து வரும் தமிழ் இலக்கியத்தில் கம்பன் ஈடு இணையற்ற ஒரு மைல் கல்லாவான். எனவே அவனை முழுவதும் அனுபவிக்க வேண்டுமானால் சங்க இலக்கியம், சிலம்பு, மணிமேகலை, சிந்தாமணி, பெரிய புராணம் முதலிய பிற தமிழ் இலக்கியங்களையும் தேவாரம், திருவாசகம் திவ்யப் பிரபந்தம் போன்ற பக்தி இலக்கியங்களையும் நன்கு பயின்றிருத்தல் வேண்டும். வான்மீகி கண்ட இராமனை விட ஆழ்வார்கள் கண்ட இராமனே கம்பன் படைப்புக்கு மூலகாரணமாவான். இதனை அறிந்துகொண்ட கம்பன் அடிப்பொடி இந்த இலக்கியங்களிலும் ஓரளவு பயிற்சி பெற்றிருந்தார்.

எனவே அவருடைய கல்வி அறிவு மிகப் பரந்து பட்டதும் ஆழமானதும் ஆகும். இத்தனை இலக்கியங்களையும் பயின்றார்; அவற்றை மதித்தார்; ஆனால் கம்பனே அவருடைய வழிபடு கடவுளாக ஆகி விட்டான்.

தமது அறுபதாம் ஆண்டில்தான் கம்பனுக்கு நிலையான ஒரு மண்டபம் கட்ட வேண்டும் என்ற எண்ணம் அவருள் முகிழ்த்தது. அதற்குரிய முயற்சிகளில் முழு மூச்சாக இறங்கினார். அந்தக் கனவு முழு வடிவு பெற எத்தனையோ தடைகள் புகுந்தன. என்றாலும் அந்தக் கற்பனை ஓரளவு வடிவு பெற்று இன்று காரைக்குடியில்நிற்கக் காண்கிறோம்.

அவருடைய பெரு முயற்சியால்தான் தமிழகத்தின் பிற நகரங்களில் கம்பன் கழகங்கள் தோன்றலாயின. கம்பனைப் பற்றித் தமிழ் உலகம் இன்று இந்த அளவு தெரிந்து கொண்டுள்ளது என்றால் அதற்குப் பெரும் காரணமாக இருந்தவர் சா. க.

''மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் தம்புகழ் நிறீஇத் தாம் மாய்ந்தனர்'' என்ற புறநானூற்றுப் பாடலுக்கு இலக்கணமாக வாழ்ந்து மறைந்தவர் சா. கணேசன். அவர் புகழ் என்றும் நின்று நிலவும் என்பதில் ஐயமில்லை.

---

கல்வியில் கணக்குக்கு எவ்வளவு முக்கியத்துவம் தந்திருக்கிறோம்? வாழ்க்கையிலும் தரவேண்டும். இப்போது செலவுக் கணக்கு மட்டும்தான் முக்கியமாக இருக்கிறது. எல்லா ஆபீசிலும் அக்கௌண்ட் செக்ஷன், அது தவிர அக்கவுண்டண்ட் ஜெனரல் ஆபீசுகள் என்றே நிறைய இருக்கின்றன. பழைய காலத்திலிருந்து இப்படி ராஜாங்க ரீதியாக வரவு செலவுகளைக் கணக்குப் பார்க்கும் ஏற்பாடு இருந்து வந்திருக்கிறது. 'பெருங் கணக்கு' என்று பழைய நாளில் ஒரு உத்தியோகஸ்தர் — அவர்தான் இந்நாளில் அக்கவுண்டண்ட் ஜெனரல் என்கிறவர். இது உச்சத்தில் உள்ள உத்தியோகம். பெருங் கணக்கு என்ற மாதிரி சிறு கணக்கு இல்லை. இந்தச் சின்ன உத்தியோகத்துக்குத்தான் 'கணக்குப் பிள்ளை' என்று பெயர். 'பிள்ளை' என்பது இங்கே 'சிறிய சின்னது' என்பதைக் குறிக்கும். பிள்ளை ஜாதி இல்லை. தென்னம்பிள்ளை, அணிற் பிள்ளை என்றெல்லாம் சொல்கிற போது சின்னதைத்தானே குறிக்கும்? அப்படியே கணக்குப்பிள்ளை என்கிறவர் ராஜாங்க வரவு செலவு பார்ப்பவர்களில் சிறிய ஊழியர். ஆனால் அவருக்கு எல்லா நுணுக்கமும் தெரிந்திருக்கும். அதனால்தான் முன்பெல்லாம் ஜில்லாக் கலெக்டராக டிரெயினிங் பண்ணுகிறவன் கூடக் கணக்குப்பிள்ளையிடம் தான் வேலை கற்றுக் கொள்ள ஆரம்பிக்கவேண்டுமென்று வைத்திருந்தார்கள்.

'இப்போது இதெல்லாமே பேப்பரில் (வரவுக்குச்செலவு) சரிக்கட்டுவதாகக் காட்டி விட்டால் போது மென்று ஆகிவிட்டது. ஃபைனான்ஸ் மினிஸ்டரைப் பார்த்தால் அப்படி ஸரிக்கட்டாவிட்டால் கூடப் பரவாயில்லை. டெஃபிஸிட் பைனான்ஸிங் (ரூபாய்) நோட்டுப் போட்டும், ஊரெல்லாம் உலகமெல்லாம் கடன் வாங்கியும் சரிக்கட்டினதாகக் காட்டினால் போதும் என்றாகிவிட்டது' என்று சொல்லிக் கொள்கிறார்கள். மொத்தத்தில் இப்போது நவீன முறை என்று சொல்லிக் கணக்கில்லாமல் ஆசைகளையும், தேவைகளையும் பெருக்கி, அதற்காகச் செலவையும் பெருக்கி, மக்களை யெல்லாம் கடனாளிகளாகவும் நிம்மதி யில்லாதவர்களாகவும் செய்திருப்பதாகவே தெரிகிறது.

-ஜகத்குரு ஸ்ரீ காஞ்சி காமகோடி சந்திர சேகரேந்திர
சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்





# வந்தார்கள்; கேட்டார்கள்; இசைந்தார்கள்!



இங்கிலாந்து, இதாலி, ஜெர்மனி ஆகிய நாடுகளுக்குச் சென்ற மாதம் விஜயம் செய்து இந்தியாவுக்கும் கர்நாடக இசைக்கும் ஏராளமான நண்பர்களை உருவாக்கிவிட்டு, திரும்பியிருக்கும் திருவாலங்குடி ஜெயராமனைப் பார்க்கப் போனபோது:

**யார் யாரெல்லாம் உங்கள் குழுவில் வந்தார்கள்? கச்சேரிகள் எல்லாம் யார் ஏற்பாடு?**

மிருதங்க வித்வான் வேலூர் ராமபத்ரன், கஞ்சிரா கலைஞர் ஹரிசங்கர் நான், என் மகன் ஜி. ஜே. ஆர். கிருஷ்ணன் ஆகியோர் இங்கிருந்து போனோம். வடக்கேயிருந்து பாடகர் பீம்ஸேன் ஜோஷி, சரோட்கலைஞர் அம்ஜத் அலிகான், அல்லா ராக்காவின் மகன் ஜாகிர் உசேன் (தபலா) இவர்கள் வந்திருந்தார்கள். தம்புராவுக்கு அங்கேயே இருக்கும்பாடகிகளான கல்யாணி ஐயர், ராதாபட், கசிலா ஆகியோர் உதவினார்கள். இந்தியன் கவுன்சில் ஃபார் கல்சுரல் ரிலேஷன்ஸ் எனப்படும் கலை — பண்பாட்டுக் கழகம் லண்டனில் நடந்த 'இந்தியா ஃபெஸ்டிவ'லில் இசை நிகழ்ச்சிகளை வழங்க எங்களை இந்திய அரசின் சார்பில் அனுப்பியிருந்தது.

**லண்டனில் கச்சேரிகள் எங்கே நடந்தன? கூட்டம், ரசிகர்கள் எல்லாம் எப்படி?**

லண்டன் நியூ ஸவுத் பேங்க் ஆர்ட்ஸ் காம்ப்ளெக்ஸில் உள்ள, க்வீன் எலிஸபெத் ஹாலில் இந்தியா ஃபெஸ்டிவலுக்காக ஜுலை 6ம் தேதி, மூன்று கச்சேரிகள் — முக்கால் மணி நேரம் ஒவ்வொன்றுக்கும். முதலில் பீம்ஸேன் ஜோஷி இந்துஸ்தானி பாட்டு. அப்புறம் நானும் கிருஷ்ணனும் வயலின் — ராமபத்ரன் மிருதங்கம், ஹரிசங்கர் கஞ்சிரா. அடுத்த முக்கால் மணி நேரம் அம்ஜத் அலிகான் சரோட். 1500 பேர் அமரக்கூடிய அந்த ஹால் நிரம்பி வழிந்தது. மறுபடி ஏழாம் தேதி அதே க்வீன் எலிஸபெத் ஹாலைச் சேர்ந்த 300 பேர் அமரக்கூடிய, பர்ஸெல் ரூமில் இரவு ஏழரை முதல் பத்து மணி வரை நானும் கிருஷ்ணனும் வயலின் வாசித்தோம். ராமபத்ரனும் ஹரிசங்கரும் பக்கவாத்தியம். மீண்டும் பத்தாம் தேதி க்வீன் எலிஸபெத் ஹாலில் ஜுகல்பந்தி: நான் வயலினில் கர்நாடக இசை வாசிக்க, அம்ஜத் அலிகான் அதற்கு இணையான இந்துஸ்தானி இசையை சரோட் வாத்தியத்தில் வாசிக்க, கல்கத்தா குமார் போஸ் தபலாவும், நமது வேலூர் ராமபத்ரன் மிருதங்கமும் வாசித்தார்கள். முதல் நாளே டிக்கட்டுகளெல்லாம் விற்றுத் தீர்ந்து போய் விட்டன. கச்சேரியன்று டிக்கட் கிடைக்காது போய் விட்ட இருநூறுக்கும் மேற்பட்டவர்களின் குறையைத் தீர்க்க, க்ளோஸ்ட் சர்க்யூட் டி.வி.யில் வெளியே நிகழ்ச்சியை ஒளி பரப்பினார்கள்!

பாரதீய வித்யாபவன் ஹாலில் அவர்களுக்காக ஒரு நிதி உதவிக் கச்சேரி செய்தோம். ஹாலில் ஒரு இடம் பாக்கி இல்லாமல் கூட்டம். ஏற்பாடு செய்திருந்த மத்தூர் கிருஷ்ணமூர்த்தி ''இவர்கள் ஒரு மணி நேரத்துக்கு மேல் சேர்ந்தாற்போல் உட்கார்ந்திருக்க மாட்டார்கள். அதனால் இடையே இண்டர்வெல் கொடுக்க வேண்டும்!'' என்றார். கச்சேரி ஏழரை முதல் ஒன்பதரை வரை என்று அறிவிக்கப்பட்டிருந்தது. ஆனால் அன்று பத்தேகால் வரைவாசித்தேன்— இடைவேளை இல்லாமலே! ஒருவர்கூட எழுந்திருக்கவில்லை! பதினேழாம் தேதியன்று 'நாத பிரம்மம்' நிகழ்ச்சியில் வாசித்தேன். இந்திய ஹைகமிஷனில் மினிஸ்டராயிருக்கும் திரு வரதராஜன் இதை நடத்துகிறார்.

**அடுத்து எங்கே போனீர்கள்?**

ரோமுக்குப் பயணமானோம்.

அங்கு ஒரு பெரிய பூங்காவில் உள்ள திறந்தவெளி அரங்கில்தான எங்கள் கச்சேரி. நான் வயலின்; ஹரிபிரசாத் சௌராஸியா ஹிந்துஸ்தானி புல்லாங்குழல். ராமபத்ரன் மிருதங்கம். தபாலாவுக்கு ஜாகிர் உசேன். இந்த இளைஞர் தகப்பனார் அல்லாரக்காவையும் மிஞ்சிவிடுவார் போலிருக்கிறது வாசிப்பில். அன்று ராமபத்ரனின் மிருதங்க வாசிப்புக்குக் கிடைத்த கரகோஷம் உண்மையிலேயே காதைப் பிளந்தது!

இதாலியில் பிரபலமான மியூசிக் டைரக்டர் அலஸ்யோவுக்கு இந்திய — கர்நாடக இசையின் மீது அளவுகடந்த ஈடுபாடு. அவர் இந்த நிகழ்ச்சிக்கு ஏற்பாடு செய்திருந்தார்.

பிறகு அங்கிருந்து?

மிலானில் ஹரே கிருஷ்ண ஃபெஸ்டிவலில் எங்கள் கச்சேரி ஏற்பாடாகி யிருந்தது. சந்தூர் வாசிக்கும் பண்டிட் சிவகுமார் சர்மா, புல்லாங்குழல் கலைஞர் ஹரிபிரஸாத் சௌராஸியா, எங்கள் கோஷ்டியைச் சேர்ந்த நான்கு பேர், இதாலிய மியூசிக் டைரக்டர் நண்பர் அலஸ்யோ ஆகியோரை ரயில் நிலையத்திலிருந்து இரண்டு 'வான்'களில் ஏற்றிப் போனார்கள்.

அங்கே கச்சேரிகள் எப்படி? ஹாலில்தானா?

இல்லை. அதுவும் மிகப் பெரிய திறந்த வெளி அரங்கில்தான். இங்கேதான் ஒரு வேடிக்கை நிகழ்ந்தது. கச்சேரி செய்யப் போன நாங்கள், நிகழ்ச்சியை நடத்தாமலே ஹோட்டலுக்குத் திரும்பும்படியாகி விட்டது! காரணம் போலீஸ்!

ஏன் என்ன நடந்தது?

முதல் நாள் வேறு ஒரு ட்ரூப், ராக் அண்ட் ரோல் மாதிரி விடிய விடிய ஒரு நிகழ்ச்சி நடத்தி, ட்ரம்களைப் போட்டு அடி அடியென்று அடித்து ஏகமாய்ச் சத்தமும் ரகளையும்செய்ய,பொதுமக்கள் போலீசுக்குப் புகார் செய்து விட்டார்கள். போலீஸ் 11.30 மணிக்கு மேல் இனி நிகழ்ச்சி நடத்தக் கூடாது என்று உத்தரவு போட்டது எங்களுக்குத் தெரியாது. ஏற்பாடு செய்தபடி பத்தரையிலிருந்து பதினொன்றேகால் வரை சிவகுமார் சர்மாசந்தூர் வாத்தியம்வாசித்து முடித்தவுடன் பதினொன்றே கால் முதல் பன்னிரண்டு வரை நாங்கள் வயலின் கச்சேரி நிகழ்த்தலாம் என்று மேடையை நெருங்கியவுடன் போலீஸ் வந்து நிறுத்தச் சொன்ன பிறகுதான் விஷயம் தெரிந்தது! ஆனால் மறுநாள் எங்களை வாசிக்கச் சொல்லிச் சமாதானப்படுத்தினார்கள். நாங்களும் மறுநாள் கச்சேரி செய்து அத்தனை பேர் பாராட்டையும் பெற்றுக் கொண்டோம்.

இத்தாலியை அடுத்து எங்கே போனீர்கள்?

மேற்கு ஜெர்மனியில் உள்ள கோலோனிலும் பிராங்க்ஃபர்டிலும் நிகழ்ச்சிகளை நடத்தினோம்.

ஊரைச் சுற்றிப்பார்த்தபோது உங்கள் மனத்தில் பதிந்த விஷயங்கள் ஏதும் இருக்குமே?

லண்டனில் ஜனத்தொகை இந்தப் பத்து வருடங்களில் 0.5 சதவிகிதம்தான் அதிகரித்திருக்கிறது என்றார்கள். பிராங்க்ஃபர்ட்டில் ஜனத்தொகை குறைந்திருக்கிறதாம். குழந்தைகளைப் பெற்றுக் கொண்டு அவற்றைப் பராமரிக்கும் தொல்லைகளைப் பொறுப்போடு ஏற்றுக்கொள்ள யாரும் தயாராயில்லை. நிறையக் குழந்தைகளைப் பெற்றுக் கொள்ளுங்கள் என்று பிரசாரம் செய்கிறார்கள்.

எல்லா ஊர்களிலும் ஹோட்டல்களில் தங்கியிருந்தபோது, இரவு ஒன்பது மணிக்கு மேல் டி.வியில் மூன்று சானல்களிலும் க்ரைம் — ஸெக்ஸ் — வயலன்ஸ் நிறைந்த படங்களைக் காண்பிக்கிறார்கள். ஏன்தான் இதன் பின் விளைவுகளைப் பற்றி யோசிக்காமல் இப்படிப்பட்ட படங்களைக் காண்பிக்கிறார்களோ என்றுமிகவும்வருத்தப்பட்டேன். இந்தப் படங்களைப் பார்த்த பிறகு இரவில் அறையில் இருக்கவே பயமாக இருந்தது! (தெரிந்தவர் வீட்டுக்குப் போனபோதுகூட ஒரு சிறுவன் கையில் பிஸ்டலை வைத்துக் கொண்டு சினிமா வில்லன் பாணியில் நிற்கிறான்! ஒரு தகப்பனார் தன் பையனிடம், ''உன் பாட்டி இறந்து விட்டாளாம். செய்தி வந்திருக்கிறது!'' என்று சொன்னவுடன், ''பாட்டியை யார் அப்பா கொன்றார்கள்?'' என்று மகன் கேட்கிறானாம்! கொலைகள் மூலம் தான் மரணம் என்றும், இயற்கையான சாவு என்று ஒன்று இருப்பதே அறியாமல் இந்தச் சிறுவர் உள்ளங்களில் எல்லாம் வன்முறை நிலைத்துவிடும்படி அமைகின்றன இந் நிகழ்ச்சிகள்.

பொதுவாக இந்தியாஎன்றாலேஏழைநாடு— பாம்புகளும், பாம்பாட்டிகளும் சாமியார்களும் யானைகளும் நிறைந்த நாடு என்று தான் நினைத்துக் கொண்டிருக்கிறார்கள். இவற்றையெல்லாம் மாற்றும் முயற்சியில் இந்திய அரசு நமது செழிப்பான கலைகளையும், இசை நிகழ்ச்சிகளையும் வழங்க முன்வந்ததோடு, அதில் ஓரளவு வெற்றியும் பெற்றதில் எங்களுக்கெல்லாம் உண்மையிலேயே மகிழ்ச்சியாய் இருக்கிறது. - சாருகேசி

---

## கல்கி - பாரதி நூற்றாண்டு போட்டி-3



ஒரு தபால் கார்டில் அல்லது அதே அளவினதான வெள்ளை அட்டையில் பாரதியார் படத்தை மிகச் சிறந்த முறையில் லைன் டிராயிங்கில் இந்தியன் இங்க் சித்திரமாக வரைந்து அனுப்புகிறவருக்கு

பரிசு ரூ. 100

முடிவு தேதி செப்டம்பர் 1

பிரபல ஓவியர்கள் சிறந்த படத்தைத் தேர்ந்தெடுப்பார்கள்.


கல்கி

1982 ஆகஸ்டு 15
துந்துபி ஆடி 30
மலர் : 41 இதழ் : 3




# என்று தணியும் சுதந்திர தாகம்?

ஏழை நாட்டுக்கும் பணக்கார நாட்டுக்கும் என்ன வித்தியாசம்? ஏழை நாடு தன்னிடம் உள்ள செல்வங்களை வீணடிப்பதால் தொடர்ந்து ஏழை நாடாக இருக்கிறது. பணக்கார நாடோ குப்பையையும் மதி நுட்பத்தால் செல்வமாக மாற்றி முன்னேறுகிறது!

அரசியல் சுதந்திரத்தால் மட்டும் மக்களுக்கு என்ன லாபம்? அவர்கள் ஏழைமை நீங்கி வாழ்க்கைத்தரம் உயர்ந்தால்தான் மெய்யான விடுதலை. அது வரை தாகம் தணியாது!

சென்னை பாரதீய வித்யாபவனத்தில் க. சந்தானம் நினைவுச் சொற்பொழிவாற்றிய திரு சி. சுப்பிரமணியம் நமது கஷ்டங்களுக்கு அடிப்படைக் காரணம் தேர்தல் முறைதான் என்று கூறியுள்ளார். கட்சி அரசியலுடன் கூடிய தேர்தல் முறையில் ஒன்று, வேட்பாளர் பெரும் பணக்காரரா யிருக்க வேண்டும்; அல்லது கட்சி அவருக்காக ஏகப்பட்ட பணம் செலவழிக்க வேண்டும். எனவே கட்சி மட்டுமின்றி வேட்பாளரும் கறுப்புப் பணம் திரட்ட ஆரம்பிக்கிறார். இவர்களுக்கு உதவ முன்வரும் தொழிலதிபர்களும் கறுப்புப் பணம் உருவாக்குகிறார்கள். தேர்தலுக்குப் பின் பதவிக்கு வருபவரிடம் பிரதிபலன் எதிர்பார்க்கிறார்கள். எனவே, லஞ்ச ஊழல், கறுப்புப் பணம் எல்லாம் தேர்தல் களத்திலேயே விளைய ஆரம்பித்து விடுகிறது.

வேட்பாளர்கள் புத்திசாலிகளாக இருப்பதைக் கட்சியின் மேல் மட்டம் விரும்புவதில்லை. காரணம், 'நம்மைவிட அவன் உயர்ந்து வளர்ந்துவிட்டால்...?' என்ற கவலைதான்! இதனால் நாடாளு மன்றத்திலோ சட்ட சபையிலோ சத்தான விவாதங்கள் நடப்பதில்லை. அமைச்சரவையில் தகுதி பெற்ற அறிஞர்கள் இடம் பெறுவதில்லை. ஆற்றல் இல்லாதவர்களால் ஆளப்படும் நாடு எப்படி முன்னேறும்? இன்றைய ஆட்சியாளர்கள் அடுத்து வரும் தேர்தலில் வெற்றி பெற்று மீண்டும் பதவிக்கு வரவேண்டும் என்ற சுயநல நோக்கிலேயே செயல்பட்டு நாட்டின் செல்வங்களை வீணடிக்கிறார்கள். அரசியல்வாதிகளிடையே நிலவும் தார்மீகச் சீர்குலைவு அதிகார வர்க்கத்துக்கும் பரவி விட்டது.

இந்நிலை மாற யோசனைகளுக்குப் பஞ்சமில்லை: அரசியல் கட்சிகளுக்கு அடிப்படை சாசனம்; கணக்கு வழக்குகளை அவை மக்கள் பார்வைக்கு வைத்தல்; தேர்தலை முன்னிட்டுக் கட்சிகளுக்கு அரசாங்கமே செலவுக்குப் பணம் தருதல்; விகிதாசார பிரதிநிதித்துவம்; அம்புட்ஸ்மான்; அரசியல் கட்சிகளுக்கு கம்பெனி நன்கொடைக்குத் தடை.... இத்யாதி.

ஆனால் சீர்திருத்தங்களை இன்று நாடாளுமன்றத்தில் பெரும்பான்மை பலத்துடன் உள்ள ஆளும் கட்சியின் ஒத்துழைப்பின்றி நிறைவேற்ற முடியாது என்பதை உணர்கையில் விரக்தியே மேலோங்குகிறது இந்தச் சுதந்திர தினத்தில்.

மேலும், சட்டத்தைத் திருத்தினால் மட்டுமே போதாது. ''பதவி ஆசையும் அதிகார வெறியும் சுயநலமும் இன்றி மக்களுக்குத் தொண்டாற்றுங்கள்'' என்றார் மகாத்மா. அவர் ஆணைப்படி நம் தலைவர்கள் நடந்து கொண்டால்தான் ஜனநாயகம் வெற்றி பெறும்.

தமிழ்த்திரு நாடு தன்னைப் பெற்ற எங்கள்
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்

''**ய்**யப்போவ்! ஓங்களப் பாக்க ஆரோ வந்துக்கிருங்கப்போவ்!''

பெரிய நடு மரிச்சியில் பில்லு அரித்துக் கொண்டிருந்த வருதையன் நிமிர்ந்தார். கையால் சன் ஷேடு கட்டிக் கண்களை இடுக்கிப் பார்த்தவர் நிமிர்ந்தார்.

''அடேடே, கௌங்குப் புரோக்கரு முருகையனு வாப்பா வா! ஊட்ல அல்லாரும் சௌக்கியமுங்களா?'' — வாய் நிறைய வரவேற்றார்.

பரஸ்பர 'சௌக்கியப் பரிமாறல்களுக்குப் பின்னர், ''ஏம் மாமோவ், கௌங்கெல்லாம் தெரண்டிருக்குமே! பிடுங்கிடலாமுங்களா?'' நேரே விஷயத்தைத் தொட்டான்.

''அதுக்கென்ன வந்து கௌங்கைப் பாரேன். வா, போகலாம்.''

இருவரும் வயலுக்குள் நுழைந்தனர். மலைப் பிஞ்சுகளிடையே மல்லாந்த கர்ப்பிணியாக சன்னுசி வரதன் மலை. தென்னைகள் நடுவே செதில் செதிலான 'பனை மரங்கள். மேலே கலங்கின மேகப் புகையோடு வானம்.

''கௌங்கைப் புடுங்கிப் பாக்கட்டுமா மாமோவ்?''

''தாராளமாக எடுத்துப் பாருங்க. செத்தி இருங்க! லேய் மாயவா! மமூட்டி கொண்டு ஊட்டு வாடாப் பையா.''

மேலே அன்னாந்தவனைத் தென்னங்குலைகள் பாதித்தன.

''மரமெல்லாம் குத்தகைக்கா உட்ருக்கீங்க மாமோவ்?''

''இல்லே முருகைய்யா எல்லாஞ் சொந்தந்தான்... தோ மம்முட்டி வந்திரிச்சி.'' மண்வெட்டியை நீட்ட, வாங்கியவன் வெட்டிப் பறித்துக் குச்சியை ஆட்டிக் கிழங்கைப் பிடுங்கினான். கெண்டைக் காலளவு பருத்துக் கரணை கரணையாய்க் கிழங்கு. ஒரு கிழங்கைச் சாம்பிளுக்கு பையில் போட்டுக்கொண்டான்.

''வெல எப்படி மாமோவ்?''

''மூந்தா நேத்துத்தான் மூணுங்காட்டுக்காரக் கவுண்டருக்குக் கௌங்கை முன்னுவாடிக்காரவுங்க மூட்டை மேல 'முப்பதுன்னு பேசிக் கொண்டுக்கிட்டுப் போனுங்க. அவிங்களுது



அமரர் கல்கி நினைவுச் சிறு கதைப் போட்டி - 1982
250 ரூபாய்
மூன்றாம் பரிசுக்கதை

[அறிமுக எழுத்தாளர்]



மேட்டாங்காட்டுக் கௌங்கு. நம்மளது தண்ணி மேலேயே வந்தது. முப்பத்தியொண்ணு போட்டுக்கலாம்.''

''நீங்க ரொம்பக் கேக்கறீங்க. மொதலாளி இருவத்தைஞ்சன்னாலே மூஞ்சியத் தூக்குவாரு. நாளைக்கு மொதலாளிட்டலே பேசி முடிச்சுக்குவம்!''

சின்ன வெங்கல லோட்டாவில் பால் தர முருகையன் லேசான பிகுவுடன் ஏற்றிக் குடிக்க, அவன் கண்கள் மட்டும் தென்னங் குலைகளைத் தடவ, வருணதய்யன் அதனைக் கவனிக்க மறக்கவில்லை.

''ஏங்கறேன்! உள்ர சாமி ரூம்புல கெடக்கற தேங்கால அஞ்சாறை சாக்குல கட்டிக் குடுத்து உடு!''

''என்னாத்துக்கு மாமோவ் இதுல்லாம் புது பளக்கம்!''

''சும்மா கொண்டுக்கிட்டுப் போவேன்!''

''சரி மாமோவ் அப்ப நாளைக் காத்தால சாம்பிளெடுத்துக்கிட்டு நம்ம நாயுடு மில்லுக்கு 'வந்திடுங்க. பேசி முடிச்சிடுவம். அப்ப நான் வரேம் மாமோவ்!''

சாப்பிட்டு வந்ததும் ஈஸிச் சேரைப் போட்டு நட்சத்திரங்களை எண்ணிக் கொண்டிருந்தவர் மனைவியை அழைத்து ''வாய்க்குக் குடு புள்ளே!'' என்றார்.

வெற்றிலை சுண்ணாம்புக் கரண்டை, பாக்கு இவைகளைக் கைச் சுருக்குப் பையிலிருந்து எடுத்துப் பரப்ப வாய்க்குப் போட்டுக் கொண்டார்.

''ஏழ்....ம் புழ்ழே...ல்ஸ்ஸ்ஸ்....கௌங்குல்லாம் நல்லா கெண்டைக்கால் சோடு நல்லாப் பெரிசாயிருக்கு. எப்படியும் வெலை முப்பத்தியோர் ரூபாய்க்குப் போனாக்க ஏக்கருக்கு ஒம்பதாயிரமாவது வரும். வந்தா அடுத்த முகூர்த்தத்திலேயே பாஜி கல்யாணத்தைப் பார்க்கலாம்!''

''நீங்க வேற குருட்டுக் கணக்குப் போடாதீங்க. எப்பப் பாத்தாலும் வெள்ளாமை வீடு வந்து சேர்ரதுக்கு முன்னாடியே ஆனை வரும், குதிரை வருமின்னு சொல்றது தான். கடைசிலே ஒண்டும் வராது!'' சலித்துக் கொண்டாள் சின்னப் பொட்டு.

''என்னைக்காய்ச்சியும் என்னெக் கொறை சொல்லாம உட்ருக்கியா. சரி போய் தல மூட்டையும், துப்பட்டியும் கொண்டா புள்ள ஹாவ்....'' கொட்டாவி விட்டார் வருணதையன். அப்படியே வாயைப் பிளந்து தூங்கத் தொடங்கினார். சின்னப் பொட்டு தலையைத் தூக்கித் தலையணையை வைத்துப் போர்த்திவிட்டுப் போனாள்.

விடிந்ததும் மாட்டுப் பட்டியைச் சுத்தம் பண்ணி சாணியை எருக் குழியில் கொட்டி, மாடுகளுக்குப் புதிய சோளத் தட்டையும், வைக்கலையும் போட்டு விட்டார். வேலங் குச்சியால் பல்லை விளக்கியபடியே நிலத்தைச் சுற்றும்போது கடலைக் காட்டில் முளைத்திருந்த புல் பூண்டு, பசலையைப் பிடுங்கிப் போட்டார். மேனகா ஆதரவு ''எத்தனை மாநில முதல்வர்கள் தங்களை ஆதரிக்கிறார்கள்?'' ''இதை ஏன் நான் சொல்ல

வேண்டும்? அவர்களது வேலை பறிக்கப்பட வேண்டும் என்பது உங்கள் விருப்பமா?''

—மேனகா காந்தியிடம் கேட்கப்பட்ட கேள்விக்கு அவர் தந்த பதில்.

'ஸ்ரீவர்ஷா'விலிருந்து — ஜெயராம்ஜி.

''ஏனுங்க பழைய சோத்து நேரமாச்சு! மில்லுக்குப் போகணும்னுட்டு இங்க ஒக்காந்துக்கிட்டா எப்படிங்க?''

சின்னப் பொட்டுவின் குரல் கேட்டு எழுந்த வருணையன் கோவணத்துடன் இணற்றில் 'சொருவால்' அடித்துக் குளித்தார்.

''லேய், அந்தக் கெளங்கைப் பைல போட்டுக் கொண்டுக்கிட்டு வாடா!'' என்றதும் மகன் பாலசுந்தரம் பிளாஸ்டிக் சாக்குத் துணியிலான மௌனகா மருந்துப் பையை சைக்கிளில் மாட்டினான். சைக்கிளைத் தள்ளிக் கொண்டே போய் மண் ரோட்டில் ஏறி உட்கார்ந்தார். யானையாபிமானம்!

கர்நாடகக் காடுகளில் மரம் சுமக்க உபயோகப்படுத்தும் யானைகளைத் தினமும் 4 மணி நேரத்துக்கு மேல் வேலை வாங்கக் கூடாது என்றும், வருஷத்தில் 3 மாதங்கள் அந்த யானைகளுக்கு காஷுவல் விடுமுறை கொடுக்க வேண்டும் என்றும் காட்டிலாகா சட்டம் போட்டுள்ளது. வாழ்க இவர்களின் யானையாபிமான உணர்வு. இங்கு மனிதர்களையே....—என். ஸ்ரீதர். நாகராஜபுரத்தின் மேற்கெல்லைக்கு எதிரே கேட் மூடியிருக்கத் திட்டி வாசலாய் ஒரு சின்ன சமாசாரம் இருந்தது.

சைக்கிளை உள்ளே திணித்து நுழைந்தால் காக்கிச் சட்டையில் ஒரு கிழவர்.

''ஆர்ராது! தொறந்த ஊட்ல நாய்நுழைஞ்ற மாதிரி உள்ளார பூர்றது?'' என்றார்.

''கெளங்கு சாம்பிள் கொணாந்திருக்கேன். முதலாளியைப் பாக்கணம்!''

ஓரமாய் ஒரு டிராக்டரின் எலும்புக் கூடு பல்லிளித்தது. வடபுறம் டிராக்டரிலிருந்து கெளங்கு லோடிறக்கிக்கொண்டிருந்தார்கள். கிழங்கு உரிக்கும் இடம் என்ற போர்டு ஒரு ஆணியில் தொங்கிய தெட்டு சாலையில் கறுத்த பெண்பிள்ளைகள் வெற்றிலையால் சிவந்த வாயுடன் கிழங்குகளை நிர்வாணமாக்கிக் கொண்டிருந்தார்கள்.

அடுத்த கணம் முருகையன், ''மாமோவ்'' என்று சமீபித்தான். சேர்க்காரனை நெருங்கி உடலை ஏழு ஆக வளைத்துச் சேவித்தான்.

திருடர்: ''ஏஷியா-82 பார்க்க நீங்க போவீங்களா?''

நடிகை: ''ஊஹூம்! இங்கிலீஸ் படம்னாலே எனக்குப் பிடிக்காது..நான் போக மாட்டேன்!''

—உ. ராஜாஜி



''சாம்பிளுக்குக் கொணாந்ததை மொதலாளிட்டக் காட்டுங்க'' — முருகையன், பக்தியுடன் கிழங்கை எடுத்து நீட்டினார் வருணையன். அதை வாங்கித் திருப்பித் திருப்பிப் பார்த்த முதலாளி அதனை 'மளுக்'கென முறித்துப் பார்த்தார்.

''ம்ஹூம். ஏனுங்க இது அரிசிக்கு ஆகாதுங்களே ரொம்ப நீர்வாட்டாக் கெடக்குதுங்களே!''

அதிருப்தி தெரிவித்தார். வருணையன் முருகையனைப் பார்க்க, முருகையன்

''மொதலாளி நீங்க அப்பிடிச் சொல்லக் கூடாது. இது மாவுக்கு நல்லாருக்கும். வேணுமுன்னு சொல்லிடாதீங்க!'' என்றான்.

''முருகையா இதுல்லாம் சுத்தப்படாதுப்பா. மாவுக்குல்லாம் கிராக்கி வேற இல்லே! இப்பத்தான் சேலத்துலந்து சேட்டு ஃபோன் பண்ணினான்.''

பெரிதாக அலட்டினான் மொதலாளி. முருகையனா விடுபவன். குரலில் இரக்கத்துடன் ''மொதலாளி நீங்க இப்பிடில்லாம் சொல்லக்கூடாதுங்களே! நானும் அஞ்சாறு வருஷமா கெளங்கு புடிச்சுத் தர்ரேன். எதுனாச்சும் சரக்குல மிஸ்டேக் உண்டுங்களா? மொதலாளி!'' என்றான.

''சரி வெல எப்படித் தர்றீங்க சொல்லுங்க.''

''முன்னுவாடிக் காரவுங்க பக்கத்துக் காட்டுக் கெளங்கெ முப்பதுன்னு பேசிக் கொண்டு போறாங்க. நம்மளது தெடஞ் சரக்காச்சுங்களே. மேல ரெண்டு ரூவாப் போட்டுத் தரணும்.''

''அவனுங்க வாங்கிட்டுப் போறா அவ்வளவுதான்! பணம் நடையா நடந்து தான் வாங்கணும்! உங்களுக்கும் வேணும் எனக்கும் வேணும். முப்பதுன்னு போட்டுக்கலாம்.''

''பாத்துச் சொல்லுங்க மொதலாளி. கொஞ்சம் மனசு வையிங்க!'' வெகு நேர யோசனைக்குப் பின்னர் முதலாளி கீழே இறங்கி வந்தார்.

''சரிங்க. முருகையனுக்காவ முப்பத்தியொன்னு போட்டுக்குவம்! நம்ம எடத்துக்கு வந்துட்டு யாரும் மனசு கஷ்டத்தோட போகக் கூடாது. நாளைக்கு லாரி அனுப்பறேனுங்க! இந்தாங்க அட்வான்ஸ்!'' ரூமுக்குள் போய் ஒரு நூறு ரூபாய்த் தாளை எடுத்து நீட்டினார்.

மறுநாள் காலை ஏழு மணிக்கெல்லாம் சனி மூலையில் களிமண் பிள்ளையார் பிடித்த வருணையன், தலையில் அருகம்புல்லைச் செருகிப் பொட்டு வைத்துப் பிரதிஷ்டை செய்தார். விழுந்து விழுந்து சேவித்து விட்டுப் பயபக்தியுடன் மம்முட்டியால் பறித்து மூன்று குச்சியைப் பிடுங்கி அறுவடையைத் துவக்கினார்.

காலை முதல் சாயங்காலம் வரையிலும் ஜனங்கள் கிழங்கைப் பிடுங்கி குட்டான் குட்டான்களாகச் சாய்த்தார்கள். எங்கிருந்தோ நுழையும் திருடனாக இருள் உள்ளே புக ஆரம்பித்தது.

''காட்டுக்காரரோய் இதுமுட்டும் வண்டியக் காணம். பணம் போனாத்தான் சோறுக்க முடியும்! சோத்துக்குப் பணம்

அட்வான்சாக் குடுங்க காலேல வந்து லோடேத்திர்ரம்!'' — கோரசாகக் கூலிக்காரர்கள்.

அவர்களின் நியாயத்தைச் சிலாகித்த வருதையன் எண்ணி ஐம்பது ரூபாய்களைக் கொடுத்தனுப்பினுர்.

அன்றிரவு காவலுக்கு விழுங்கைக் சுற்றிப் படுத்துக் கொண்டார்கள் வருதைய்யனின் குடும்பத்தார். விடிந்தும் வண்டி வரவில்லை. வெயிலேறிப் பழைய சோத்து நேரத்துக்கெல்லாம் வண்டி வந்தே விட்டது. கம்ப் யூட்டர்த் தனமாகக் கடகடவென லோடு டிரெயிலரில் ஏற்றி அடுக்கி ஆட்களும் ஏறி விட்டனர்.

வேக வேகமாய் சைக்கிளில் வந்தான் முருவைய்யன். வண்டி சித்தமாக இருந்தது குறித்து சந்தோஷப்பட்டான்.

''தலேக்கு அஞ்சஞ்சு ருவா கொடுத்தாத் தான் வண்டி நகரும். இதுக்கு மேலே வேற எங்கயும் வேலேக்கு வச்சிக்க மாட்டாங்க. கொற வேலேன்னுட்டு வந்தோம். நேரமாவல கெளம்ப வேணும்?''

வருதையனின் முகம் வாடியது. டிரைவரிடம் உடைந்த குரலில் ''ஏனுங்க டிரைவர் தம்பி! வண்டிய நீங்க நேத்தே கொண்டாந் திருந்தா எனக்கிந்தப் பணம் மிச்சமாயிருக்கும். கெளங்கும் எடை நின்னிருக்கும். இப்பிடிப் பண்ணிப்போட்டீங்களே!'' என்ருர்.

சலித்துக் கொண்டார் டிரைவர். விரோத பார்வையுடன் கோபமாய் ''நான் என்னயா பண்ணுவன்! நேத்து மல்லி காரருக்குப் போயிட்டேன். உனக்காவ அத நிறுத்தவா முடியும்?'' என்ருர்.

ஆத்தூரில் எடை போட்டு மில்லில் கெளங்கை இறக்கினுர்கள்.

மணி பன்னிரண்டரைக்கு ஆபீஸ் ரூமிலிருந்து ஒருவர் ''கெளங்கு போட்ட ஆள் ஆருங்க?'' என்றதும், ''நாந்தேன்'' என்றவாறு பரபரப்பாய் எழுந்திருந்துசேவித்தார்.

பதிலுக்குத் தலையசைத்தவன் கையிலிருந்த சிட்டை அறிக்கை வாசித்தான்:

மானேஜர்: ''ஏம்பா, உன்னேக் கூப் பிட்டு எவ்வளவு நேரமாச்சு? தூங்கிக் கிட்டிருந்தியா?''

குமாஸ்தா: ''நான் வந்து பத்து நிமிஷம் ஆச்சுங்க!''

மானேஜர்:''அப்படியா? நான்தான் கொஞ்சம் அசந்துட்டேன் போல இருக்கு!''

—'பாரதி'



''மொத்தம் எறக்குனது எரநூத்தம்பது மூட்டை. பொடிக்குப் பதினேஞ்சும் மண்ணுக்குப் பத்தும் கழிச்சது போவ ராசிக் கெளங்கு எரநூத்தி இருபத்தஞ்சு மூட்டை. மூட்டை மேல இருவத்தஞ்சு ரூவான்னு மொத்தம் ஐயாயிரத்து அறுநூத்திருவத் தஞ்சு ரூவா!''

''என்னங்க ஒரே அநியாயம்!'' — வருதையன் அதிர்ந்தார்.

''இன்னும் கேளுங்க!

''புடுங்கு கூலிமூட்டைக்கு ரெண்டு ரூவா மேலே ஐந்நூறு ரூபா, டிராக்டர் வாடகை நூத்தி இருவத்தைதஞ்சு, எறக்கு கூலி மூட்டைக்கு எட்டணு மேலே நூத்தி இருவத் தஞ்சி. எல்லாம் போட்டுக் கழிச்சி நிகர இருப்பு நாலாயிரத்து எண்ணூத்தி எழுபத் தஞ்சு ரூவா!''

கேட்டவருக்குத் தலை சுற்றத் தூணைப் பிடித்துக் கொண்டார்.

''யோவ் எங்கய்யா ஒங்க முதலாளி?... கூப்பிடுய்யா அந்தாளே.''

''மொதலாளி முக்கியமான ஆபீசருங்க கிட்டப் பேசிக்கிட்டிருக்காரு. இப்பப் பாக்க முடியாது.'' நந்தியானுன் கேஷியர். அவனே அலட்சியமாக ஒதுக்கி அந்த ஏர் கண்டிஷன் ரூம் கதவை இடித்தார்.

''என்னேயா என்னேயாச்சு?'' அழகி ரசனையை இடையில் நிறுத்திக் கோபத்துடன் வெளியே வந்தார் முதலாளி.

''ஏனுங்க ஒங்களுக்கே நல்லாருக்கா முப்பத்தி யொன்னுக்குப் பேசிட்டு, இன்னிக்கு இருவத்தஞ்சன்னு போட்டிருக்கீங்க. பொடி மண்ணு ஒண்ணும் இல்லாதப்பவே கழிச்சிருக்கீங்க. என்னய்யா ஒரே பகல் கொள்ளேயா நடத்தறீங்க!''

''யோவ் இப்பத்தான் அந்தச் சிறுக்கி மவன் சேட்டு மூட்டை அரிசி மேல எருவத்தஞ்சி ரூவா கொறஞ்சு போச்சுன்னு சொல்லிட்டான்! வெல கொறஞ்சதுக்கெல்லாம் நாளு தாலி அறுப்பேன்! வேணுன்னு தொட்டில கெடக்கற கெளங்கை கொண்டுக்கிட்டுப் போயி நல்ல வெலேக்கு வித்துக்கவேன்! லேய் தொட்டிக் கெளங்கை அள்ளிக் கொடுங்கடா. போய்யா போ!''

கேஷியர் வருதய்யனேத் தனியே அழைத்துப்போய் இரக்கமுடன்,

''பெரியவரே! கெளங்க வெளிய கொண்டு போனு வேற மில்லுக்காரன் ஒரு மில்லுலேருந்து வந்ததை வாங்க மாட்டானுவ! இது இருப்பும் வைக்க முடியாத பண்டம் வேற! மாட்டீட்டீங்க! பேசாமக் கொடுக்கிற ரெண்டாயிரத்தை இப்ப வாங்கிக்கங்க! பொறவால வந்து பாக்கி வாங்கிக்குங்க!'' என்ருர்.

மகளின் கல்யாணம், மகனுக்குக் கடிகாரம், மனைவிக்குப் புடவை, உரக்கடைப் பாக்கி, அடகு வச்சநகை திருப்பறது என்ற பல கனவுகளேக் காலுக்குக் கீழே போட்டு அரைத்தார் வருதைய்யன். பணம் வாங்கிய கைகள் நடுங்க, தோல்வி பாரத்தில் அந்த ஏழை விவசாயி நொறுங்கிச் சில் சில்லாகிப் போனுன்.

# முதலீட்டை மிஞ்சிடும் விலை மதிப்புமிக்க டிராக்டர்

## எம்.எஃப் 1035






அனைத்து விவசாயப் பணிகளுக்கும் அத்தியாவசியமான கருவிகள், உபகரணங்கள் கொண்ட எம்.எஃப். 1035 டிராக்டர், இருபது வருடங்களுக்கும் மேலாக உழவர் பெருமக்களின் நம்பிக்கைக்குப் பாத்திரமாகியுள்ளது.

எம்.எஃப். 1035 டிராக்டரின் தனிச் சிறப்புகள்—

—பாரத்தை எடுத்துச் செல்வதில் மிகப் புதியதான பெர்குஸன் ஹைட்ராலிக்ஸ் முறையில் இயங்குகிறது.

—ஆட்டோமேடிக் டிராஃப்ட் கண்ட்ரோல், பொசிஷன் கண்ட்ரோல் மற்றும் ரெஸ்பான்ஸ் கண்ட்ரோல் அமைந்திருப்பது.

இன்றைய வேளாண்மைத் தொழில் துறையில் புதுமையின் உருவகமாகிய எம்.எஃப். 1035 டிலக்ஸ் டிராக்டர், டாஃபேயின் தர முத்திரையோடு திகழ்கிறது. சௌகரியமாகவும், சுலபமாகவும், அரும் திறனோடும் இயங்கப் பல அம்சங்கள் பெற்றது—எம்.எஃப். 1035 டிலக்ஸ். நாடெங்கிலும் 200க்கும் அதிகமான விற்பனை, மற்றும் பராமரிப்புக் கேந்திரங்களின் (சர்வீஸ்) மூலம் டாஃபே உங்களுக்குத் தனிச் சிறப்பாகச் சேவை செய்கிறது. முதலீட்டை மிஞ்சிய மதிப்பு மிக்கது—எம்.எஃப். 1035 டிலக்ஸ்.



MAC T47A-TAM







ட்ராக்டர்ஸ் அண்ட் ஃபார்ம் எக்யிப்மெண்ட் லிமிடெட் சென்னை.

# கமலின் டான்ஸை ரசித்தீர்களா?

✕ மன்னை நேசன், பழவந்தாங்கல்

? 'கடவுள் இல்லை என்று கூற ஒருவனுக்கு அபிப்பிராய சுதந்திரம் உண்டு. ஆனால் கடவுளை நம்புகிறவன் முட்டாள் என்று சொல்லும்போது அடிப்படை சுதந்திரம் துஷ்பிரயோகமாகிறது' என்று கூறியுள்ளீர்கள். கத்தியை சாதாரணமாக ஒருவன்மீது பிரயோகித்தால் அது சட்டப்படி குற்றம். ஆனால் அதே கத்தியை டாக்டர் அறுவைச் சிகிச்சைக்காக ஒருவன் மீது பிரயோகித்தால் குற்றமல்ல. அது போல....

! நோயாளியின் முன் அனுமதி இன்றி டாக்டர் கத்தியை சஸ்திர சிகிச்சைக்காகக் கூடப் பிரயோகிக்க முடியாது. அது போல...

✕ ஆனந்த் மு. கலியாணசுந்தரம், மேட்டுப்பாளையம்

? ஒரு பக்கத்தில் சத்துணவுத் திட்டத்துக்கு அபார ஜால்ரா, இன்னொரு பக்கத்தில் மொபைல் திட்டத்தைப் பற்றிக் கேலியும் கிண்டலும். ஏன் இந்த இரட்டை வேடம்?

! வேஷம் போடாமல் கல்கி அனைவரிடமும் உண்மையான நட்புடன் நடந்து கொள்வதால்தான் நல்ல திட்டங்களை வரவேற்கும்போதே தவறான கொள்கைகளையும் செயல்களையும் வள்ளுவர் வாக்குப்படி ''மேற் சென்று இடித்து''க் காட்டுகிறது. இன்னொரு விஷயம்: மொபைல் போலீஸ் ஸ்டேஷன் பற்றி உமாபதி வரைந்தவை நகைச்சுவைத் துணுக்குகளேயன்றி அந்தத் திட்டத்தையே குறை கூறிக் கிண்டல் செய்யும் அரசியல் கார்ட்டூன்கள் அல்ல.

✕ பொ. பொன் ராஜ்குமார், கழுதி.

? சுதந்திர தினத்தை எப்படிக் கொண்டாடலாம்?

! எம். ஜி. ஆர். மது அரக்கனுக்கு அடிமையாகாதீர் என்று பிரசாரம் செய்தவாறே மேலும் நாலு சாராயக் கடைகள் சுதந்திரமாகச் செயல்பட அனுமதி வழங்கலாம்.

மேனகா: 'மாமியார்கள் கொடுமையிலிருந்து சுதந்திரம்' என்று முழங்கலாம்.

கருணாநிதி: நடிகர் கட்சி ஆட்சியிலிருந்து விடுதலை வேண்டித் தில்லிக்குப் பாத யாத்திரை தொடங்கலாம்.

இந்திரா: தம்மைக் கவிழ்க்கப் பார்க்கும் எதிர்க் கட்சிகளின் சூழ்ச்சியிலிருந்து விடுதலை பெறவும் பாரம்பரிய ஆட்சி சுதந்திரத்துக்காகவும் தொடர்ந்து பாடு படுவதாகச் சபதம் ஏற்கலாம்.

பீகார் முதல்வர் ஜகந்நாத் மிச்ரா: பத்திரிகைச் சுதந்திரத்திலிருந்து அரசியல்வாதிகளுக்குச் சுதந்திரம் வேண்டும் என்று எம். ஜி. ஆருடன் சேர்ந்து கூட்டறிக்கை விடலாம்.

நீங்களும் நானும்: விலைவாசி உயர்விலிருந்து விடுதலை பெற முடியாதென உணர்ந்து ஒரு குரல் அழலாம்.

✕ கே. எஸ். எஸ். மணியன், கூத்தாநல்லூர்.

? மறைந்த கம்பனடிப்பொடி சா. கணேசன் பற்றி..

! கம்பனடிப்பொடி பற்றி அ. ச. ஞானசம்பந்தம் இந்த இதழில் எழுதியிருப்பதைப் படித்துக் கொள்ளுங்கள். சா. கணேசன் குறித்து: விடுதலைப் போராட்டத்தின்போது கைது செய்த போலீஸ் சட்டையைக் கிழித்ததன் விளைவாக 'இனி சட்டை அணிவதில்லை' என்ற சபதம் பிறந்தது. நீதிபதி 'என்ன சாதி?' என்றார். 'இந்திய சாதி' எனப் பதில் கிடைத்தது! தாம் பிறந்து வளர்ந்த வட்டாரத்தில் ராஜ விசுவாசம் மிகுதியாக இருந்த போதிலும் துணிந்து பிரிந்து வந்து விடுதலைப் போரில் ஈடுபட்டவர்களில் ஒருவர். அதன் விளைவாகத்தம் சொத்துக்களை நேர்முகமாகவும் மறைமுகமாகவும் இழக்கத் துணிந்தவர். ராஜாஜியிடம் பக்தி கொண்டு நெருக்கடிகளில் அவருக்கு உதவி, அவர் உயர் பதவி வகித்த காலத்தில் ஒதுங்கியிருந்த உத்தமர். 'கம்பன் வாழ்க கன்னித் தமிழ் வாழ்க' என்ற முழக்கத்துடன் தொடங்கிச் சொற்பொழிவாற்றுகிற அவர் கணீர் குரல் என்றும் செவிகளில் ஒலித்துக்கொண்டிருக்கும். ஆணழகர் ஊர்! ''எழுத்தாளர் கி. ராஜநாராயணனின் சொந்த ஊரான இடை செவலுக்கு ஒரு சிறப்பு உண்டு. என்னவென்கிறீர்களா?'' அழகான ஆண்கள் நிறைந்த ஊர்'' என்பதுதான்!

—''ராஜகுமாரன்''

(இது உண்மையாக இருக்குமா? இடைச் செவலைச் சேர்ந்த அழகான ஆண்கள் யாராவது தங்கள் புகைப் படத்துடன் சேர்த்துச் சரியான தகவலைத் தெரிவிக்கலாமே?)

✕ ஆ. சுகுமார், சின்ன காஞ்சிபுரம் ★

? நாட்டு மக்களுக்குச் சேவை செய்யப் போவதாகச் சொல்லிக் கொண்டு வரும் அரசியல்வாதிகளுக்கு விளம்பரம் தேவைதானா?

! முதல்வர் நடித்த திரைப்படங்களை அரசுச் செலவில் மாதமொரு முறையாவது மக்களுக்குக் காட்டுமாறு மாவட்ட மக்கள் தொடர்பு அதிகாரிகளுக்கு, செய்தி விளம்பரத் துறை இயக்குனர் சுந்தரம்—

அனுப்பியுள்ள வெட்கக்கேடான சுற்றறிக்கையைப் பார்த்தால் அரசியல் வாதிகளுக்கும் விளம்பரம் தேவைதானே என்று தோன்றும். ஆனால் இது தவறான கணிப்பு. செயல் திறனே போதிய விளம்பரமாக அமைய முடியும். செயல் திறன் குறையும்போதுதான் மக்களின் வரிப் பணத்தில் இத்தகைய விளம்பரம் தேடுதல் அவசியமாகிறது.

✠ வி. சௌரிராஜன், - ஸ்ரீரங்கம்

? சில பத்திரிகை ஆசிரியர்களே எழுத்தாளர்களைப் பச்சையாக எழுதும்படி கேட்கிறார்களாமே?

! கேட்கவில்லை என்றே வைத்துக்கொள்வோம். எழுத்தாளர்கள் தாங்களாகவே தான் பச்சையாக எழுதுவதாக நம்புவோம். ஆசிரியர்கள் அதை நீக்கிவிடலாம் அல்லவா? அந்த உரிமையைப் பிரயோகிக்காதது பச்சையாக எழுதும்படி கேட்டதற்குச் சமமே. புதுதில்லியில் ஓர் இலக்கியக் கூட்டத்தில் சு. சமுத்திரம் கூறியிருக்கிறார்: ''பாலுணர்வு வாழ்க்கையில் ஓர் அம்சம். அடிப்படையான அம்சம். ஆனால் இதுவே வாழ்க்கையாகி விடுவதில்லை. எழுத்திலும் இந்த உணர்வைப் பிரதிபலிக்கலாம். இதுவே எழுத்தை ஆக்கிரமிக்க விடக் கூடாது.''

✠ எல். ஆர். விஜயகுமார், பட்டினப்பாக்கம்

? சனம் தேரி கஸம் படத்தில் கமலின் டான்ஸை ரசித்தீர்களா?

! இல்லை. ஆனால் 'மத்திய அரசுக்கு இந்தி திணிப்பு உத்தேசம் இல்லவே இல்லை' என்ற எம். ஜி. ஆரின் உடான்ஸை ரசித்தேன்!

✠ ஆர். வி. ரமணன், சென்னை-40

? கலர் டீவிக்கு புக் செய்து விட்டீர்களா?

! இல்லை; முதலில் கறுப்பு வெளுப்பு டீவி, பிறகு கலர் டீவி என்று இரட்டைச் செலவு வைக்கும் அரசை இப்போதைக்குச் சபித்துக் கொண்டிருக்கிறேன். இலங்கைபோல இவர்களும் தொடக்கத்திலேயே கலர் டீவி கொண்டுவந்திருந்தால் டீவிசெட் விஷயத்தில் மட்டுமின்றி டீவி ஒளிபரப்பிலும் வரி செலுத்துவோனுக்கு ஏராளமான தொகை மிச்சமாயிருக்கும்.

✠ பி. ஆறுமுகம், மணச்சநல்லூர்.

? மாணவர்களுக்குக் கல்வி கற்பிக்கும் ஆசிரியர்களே காப்பி அடிக்கிறார்களே?

! இது விஷயத்தில் மாணவர்களைத் தாங்கள் காப்பி அடிப்பதாக அவர்கள் கூறலாம்! ஆனால் ஒன்று. விஜயகுமார் கர்க் என்ற மாணவன் ஒரு விபத்தில் வலக் கரத்தில் உணர்ச்சி இழந்தபோது, அவன் சிகிச்சை பெற வியன்னாவுக்கு அனுப்ப ஜிப்மர் மாணவர்கள் பகீரதப் பிரயத்தனம் மேற்கொண்டார்களே. இது போன்ற விஷயங்களில் ஆசிரியர்கள் மாணவர்களைப் பார்த்துக் காப்பி அடிக்கட்டுமே!

✠ ஆர். ஸ்ரீனிவாசன், ஸ்ரீரங்கம்

? அரசியல் வாதிகளிடம் உள்ள நிச்சயமின்மையும் அரசியலில் உள்ள நிரந்தரமின்மையும் எப்போது தொலையும்?

! தேர்தல் முறை மாற்றியமைக்கப் படும்போது. பண பலத்துக்குப் பிரதானியமில்லாமல், மைனாரிடி வோட்டில் மெஜாரிட்டி இடங்களைப் பிடிக்க வாய்ப்பில்லாமல், விகிதாசார பிரதிநிதித்துவ முறை வந்தால் சிறுபான்மையினருக்கும் ஆட்சிப் பொறுப்பில் செல்வாக்கு இருக்கும். அரசியலை மட்டுமே தொழிலாகக் கொண்டவர்கள் மட்டுமின்றி பல துறை அறிஞர்களும் தேர்தல் களத்தில் குதிக்கத் தைரியம் பெறுவார்கள். நமது தேர்தல் முறை பிரிட்டிஷ் அடிப்படையில் அமைந்தது. அங்கேயே அறிஞர்கள் இம் முறையில் அதிருப்தி அடைய ஆரம்பித்துவிட்டனர் எனில் அவர்களைவிட கல்வித் தகுதியில் மிகத் தாழ்ந்துள்ள இந்தியாவுக்கு இம் முறை எப்படி நற்பயன் தரும்?

✠ பி. எம். இப்ராஹீம், குளச்சல்

? எந்த மாதிரியான நூல்களைப் படித்தல் நல்லது?

! ''ஒரு புத்தகத்தைப் படிக்கும்போது உங்களால் திரும்பப் பெற முடியாத உங்கள் வாழ்க்கையின் சில மணி நேரங்களை அதற்கு வழங்குகிறீர்கள். இதற்குப் பிரதியாக அந்த நூல் உங்களுக்கு என்ன வழங்கும் என்று கவனித்து அத்தகைய நூல்களைத் தேர்ந்தெடுங்கள்!'' — சொன்னவர் ராஜாஜி.

★ ரூ. 10/- பரிசு பெறுபவர்:

ஆ. குருமார்,
12ஏ, தேசிபோனியம் தெரு
சின்ன காஞ்சிபுரம்-
631 501





# ஓசிப் பயணம்!







தமது ஐம்பது வயதுக்குள் Forbus Campnell என்ற கம்பெனியின் நிர்வாகத்தலைவராகவும் மற்றும் பதின்மூன்று கம்பெனிகளுக்கு டைரக்டராகவும் பணியாற்றுகிறார் திரு டி. ரங்கநாதன். இவற்றுள் சிங்கப்பூர், ஸ்விட்ஜர்லாந்தைச் சேர்ந்த கம்பெனிகளும் உண்டு. இருந்தும் எளிமை! நண்பர்களுடன் ஒட்டிப் பழகும் தன்மை. பார்த்தால் முப்பத்தைந்து வயதுக்கு மேல் மதிக்க முடியாது.

கரூரில் பிறந்து பூனாவில் படித்து பி.எஸ்.ஸியில் சர்வ கலாசாலை முதல் மாணவராகத் தேறி பெங்களூர் இந்தியன் இன்ஸ்டிடியூட் ஆஃப் ஸயின்ஸில் உலோக வியல் படித்து அதிலும் இரண்டாவது ரேங்கில் பாஸ் செய்து மஹேந்திரா அண்ட் மஹேந்திராவில் ஆரம்ப நிலையில் ஜீப் தயாரிப்பதில் பிளானிங் இன்ஜினியராகச் சேர்ந்தார். இதுவரை படிப்பு முழுவதும் ஸ்காலர்ஷிப் தான். 1957ல் ஒரு உபகாரச் சம்பளம் கிடைக்கவே அமெரிக்காவில் பென்ஸில்வேனியா சர்வ கலாசாலையில் எம். எஸ். பட்டம் வாங்கினார். 1959 முதல் 1962 வரை இரண்டு அமெரிக்க நிறுவனங்களில் வேலை செய்த ரங்கநாதன் தாய் நாட்டுக்கு ஒரு முறை வந்து போக விரும்பினார். ஓசிப் பயணத்திலேயே நாடோடி போல ஊர் ஊராகப் போய்ப் பார்த்தவாறே இந்தியாவை அடைவது என்று தீர்மானித்தார்.

இடுப்பு பெல்டில் 500 டாலர், சட்டைப் பையில் 50 டாலர். இதுதான் இவரிடம் இருந்த தொகை. சாலைகளில் போகும் காரோ, லாரியோ, டிரக்கோ எல்லாவற்றிலும் லிப்ட் கேட்டுக் கிடைத்தவற்றில் பிரயாணம்.

க்யூபெக்கிலிருந்து ரொடர்டாம் வரையில் கப்பலில் சென்றார். சக பயணிகளுக்குக் கை ரேகை பார்த்து 150 டாலர் சம்பாதித்து கப்பல் செலவைச் சமாளித்தார். இளைஞர்களுக்கான தங்கு விடுதிகளில் அதிகச் செலவின்றி முகாமிட்டார். அந்தந்த ஊர்களில் என்ன வேலை கிடைக்கிறதோ செய்து சம்பாதித்தார்.

பிரான்ஸில் தாடி வைத்துக் கொண்டதால் இவரை அல்ஜீரியன் என்று நினைத்து வேலை தர மறுத்தனராம். யூகோஸ்லாவியாவில் சாலைகளில் லிஃப்ட் தர வாகனமே கிடைக்காமல் நாட் கணக்கில் நடக்கும்படி ஆயிற்று.

ஸ்விட்ஜர்லாந்த் வந்தபொழுது இளைஞர் விடுதிகளில் இடம் கிடைக்கவில்லை. ஹோட்டல்கள் கட்டுபடி ஆகாது. போலீஸ் ஸ்டேஷனில் போய் விசாரித்ததில் ''இங்கு குற்றங்கள் குறைவு.ஆதலால் ஜெயிலிலும் கூட்டம் குறைவு. வேண்டுமென்றால் இரவு இங்கு படுத்துக் கொள்ளலாம்'' என்றார்கள். சந்தோஷத்துடன் சிறைவாசம் செய்தார். ரோமில் டூரிஸ்ட் கைடாகப் பணியாற்றினார். போப் ஆண்டவரைத் தரிசித்தார். பெய்ரூட், டர்க்கி ஒரு இடம் விடவில்லை. ஈரான் மன்னர் இவர் பயணம் பற்றி அறிந்து தாம் கொடுத்த ஒரு விருந்தில் கலந்துகொள்ள அனுமதித்தார். ஜெருசலம் வந்தபோது யார் கண் பட்டதோ மலையிலிருந்து விழுந்துவிட்டார். இரண்டு மாதம் ஒரு நண்பர் வீட்டில் தங்கி, உடல் நிலை சரியானவுடன் ஆப்கானிஸ்தான் வழியாக அமிர்தசரஸ் வந்து ரயில் மூலம் டில்லியை அடைந்தார்.



பம்பாய் ஐ. ஐ. டி.யில் பேராசிரியராகச் சேர்ந்தார். பிறகு புதிய வேலைகள், படிப்படியாகப் பதவி உயர்வுகள். அழகிய மனைவி, ஆசைக்கு ஒரு பெண். ஆஸ்திக்கு ஒரு பிள்ளை. இன்று மாதம் ஒரு முறையாவது தமது வேலை காரணமாக வெளி நாடுகளுக்குச் சென்று வரும் ரங்கநாதனுக்குத் தமது உலகம் சுற்றும் ஓசிப் பயண அனுபவம் அடிக்கடி நினைவு வருவதில் வியப்பென்ன?

—லட்சுமி கண்ணன்

# விடிவதற்குள் வா!



3

ரத்னசாமியின் முகத்தில் தெரிந்த அறியாமையைப் பாசாங்கா நிஜமா என்று கனகசபையால் கண்டு கொள்ள முடியவில்லை. ரத்னசாமியைப் பற்றிய எல்லா எண்ணங்களுமே அவருக்கு இவ்வாறு சந்தேக சரிகை படிந்ததாகவே இருந்திருக்கின்றன. ரத்னசாமி கிரிஜாவை அக்கா அக்கா என்று அழைப்பதிலேயே ஒருவித கேலி இருந்ததாகத்தான் பட்டது. ரத்னசாமி அவளுக்கு எந்த விதத்தில் தம்பி உறவு என்பதை அவன் திட்டமாகத் தெரிந்து வைத்துக்கொள்ளவில்லை. சித்தப்பா பையன் என்றான். சித்தப்பா என்று அவளுக்கு யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. ஒன்று விட்ட சித்தப்பா என்றாள். அவளும் அவனைத் தம்பி தம்பி என்றுதான் சொன்னாலும் இரண்டு பேருக்கும் வயது வித்தியாசம் இருக்காது போலத் தெரிந்தது. ''நீங்க போயிருக்கிறப்ப அக்காவை நான் கவனிச்சுக்கறேங்க! நல்லாக் கவனிச்சுக்கறேன்! கவலையே படாதீங்க கனகு ஸார்!''

ரெண்டு பேரும் சிரித்துப் பேசியதைப் பார்த்திருக்கிறான். அதனால் அதற்கு விபரீத அர்த்தம் கொள்ள முடியவில்லை. கனகசபைக்கு எப்போதும் தன் மனைவியின் விசுவாசத்தில் சந்தேகம் இருந்ததில்லை. இருந்தும் ரத்னசாமியுடன் அவள் உறவை அவனால் பாகுபடுத்த முடியவில்லை.

''என்ன ரத்னசாமி இது? உன் கையெழுத் இல்லையா?''

''எனக்குத் தமிழ் எழுதவே வராதே கனகு! நான் மலையாளத்தில இல்லே படிச்சேன்''

''தமிழ் படிக்கிறியே.''

''இது தமிழ் பேப்பர் பார்த்துப் பார்த்துப் பழகினது. இப்ப என்ன சொல்றீங்க?''

'''ரசா'ங்கிறது யாரு பின்னே?''

''எனக்கென்ன தெரியும் கனகு? ஓ! 'ரசா'ன்னு ரத்னசாமின்னு எடுத்துக்கிட்டீங்களாக்கும்!''

''ஆமா.''

''ராமசாமியா இருக்கக் கூடாதோ?''

''இப்ப கிரிஜா எங்க? உனக்கு ஏதாவது தெரியுமா?''

''நாகர்கோவிலுக்குத்தான் போயிருக்கும் கணே.''

''நீ எப்பப் பார்த்த அவளை?''

''திருவிழாவுக்கு வந்திருந்தேனில்ல? அப்ப பார்த்தேன். சௌக்கியம் விசாரிச்சேன். நீங்க வரதாத் தகவல் சொல்லலையே?''

''அப்ப எனக்கு லீவு ஊர்ஜிதமாகலே. போன வாரம்தான் கடுதாசி எழுதியிருந்தேன். அது வீட்டுக்குள்ளாரவே கிடக்கு.''

''நாகர்கோவில்தான் போயிருக்கும். நான் வேணு போன் பண்ணிச் சொல்ல ஏற்பாடு செய்யட்டுமா? டைட்டேனியம் பாக்டரில போன் வெச்சிருக்காங்க. சூப்பரைசர் தெரிஞ்சவரு!''

''சரி! அப்படித்தான் செய்.''

ரத்னசாமி போகையில் தலையை ஆட்டிக் கொண்டு சிரித்துக் கொண்டே சென்றான்.

''என்னன்னு எண்ணிட்டிங்க? நான் வந்து கிரிஜா அக்காவை எங்கயாவது பதுக்கி வெச்சிருக்கிறதாவா? சரியாப் போச்சு! இருங்க கடைக்குப் போன் பண்ணித் தகவல் தெரிஞ்சுக்கிட்டு வந்துர்றேன்.''

ரத்னசாமி போனதும் கனகசபை கடையில் பெஞ்சியில் போய் உட்கார்ந்து கொண்டு எதிரே கடலைப் பார்த்தான். இப்போது சாந்தமாக இருந்தது. மணற்காடு கிராமம் முழுவதும் தெரிந்தது. அந்தக் கிராமம் தன்னிடம் சொல்லாமல் எதையோ மறைத்து வைத்திருப்பது போல் தோன்றியது அவனுக்கு. கிரிஜா நாளைக் காலை வந்ததும் கேட்டுவிட வேண்டும். தயங்கவேகூடாது. 'என்ன கிரிஜா எவ்வளவு ஆசைப்பட்டு வந்தேன். நீ வீட்டில இல்லேன்னப்புறம் எவ்வளவு ஏமாற்றமாயிடுச்சு தெரியுமா? இனி இந்த மாதிரி செய்யாதே என்ன!'

பாதிரியார் இரண்டு சிறுவர்களை அழைத்துக்கொண்டு சர்ச்சுப் பக்கம் நடந்து சென்றார். கனகசபையைக் கடக்கும்போது புன்னகை செய்தார்.

''இந்தாளு வந்து ரொம்ப ஊரைக் கெடுத்துட்டான் கனகசபை'' என்றார் சதாசிவம். பாதிரியாருக்குக் கேட்டிருக்கும்.

''ஏன்! என்ன?''

''மீனவர்களையெல்லாம் மதம் மாத்திக்கிட்டு இருக்கார்!''

''மதம் என்ன மதம்! இவங்களுக்கெல்லாம் சோறு ஒண்டிதான் மதம்! நீ சரியாச் சோறு போடு. திரும்ப உங்கட்சிக்கு வந்துருவான்.''



''இருந்தாலும் இந்த ஊர்லே இஷ்டியன்லே இருந்ததில்லே கனகசபை. இப்பப் பாரு! எவ்வளவு பெரிசா கோயில் கட்டியிருக்காம் பாருங்க! ஒரு நா இல்லே ஒரு நா சண்டை வரத்தான் போவுது.''

''தடையா நடக்கிறாரு பாதிரியாரு. வெள்ளைக்காரங்க பணம் நிறைய வெச்சிருக்காரு. மலையாளம் தமிழ் ரெண்டும் நல்லாப் பேசுறாரு. சின்னச் சின்னதா பேனு பென்சில் குச்சி எல்லாத்தையும் கொடுத்து மாத்திப்பிடறாரு!''

கடைக்காரர், ''ஆமா. நீங்களும் ஒருத்தருக்கு ஒருத்தர் சண்டை போட்டுக்கிட்டு ஒழுச்சிலே கிழக்கு மேற்கு பார்த்துக்கிட்டு ரெண்டு வருசம் கோயிலே விட்டிங்க. திருவிளா எடுக்கலே. கிஷ்டியன், முஸ்லிமான் எல்லாரும்தான் வரப்போறாங்க. அவங்க கூட ஏதோ கட்டறதுக்கு பஞ்சாயத்திலே நெலம் கேட்டிருக்காங்கபோல!''

''என்னவோ இந்த ஊரைச் சனி புடிச்சிருக்குது. ஒரு பாவா வந்தானே சாம்பிராணி ஊதிக்கிட்டு தெரியுமில்லே மயிலிறகை விசிறிக்கிட்டே குறி சொன்னான். ஊர்ல ரத்தம் ஓடப்போவுதுன்னு.''

''ஆ! அப்படியா சொன்னான்? எடா உண்ணி இவ்ட வரு!''

உண்ணி சிரித்துக் கொண்டே வர சதாசிவம் அவன் பின் பக்கத்தைத் தட்டி ''எப்படா துபாய் போகப் போறே?'' என்றான்.

''ஆகஸ்டு மாசம்'' என்றான் தீவிரமாக.

''பாஸ்போர்ட், ஒர்க் பர்மிட் எல்லாம் கிட்டியோ?'' சதாசிவத்துக்கு ஒன்றிரண்டு மலையாள வார்த்தைதான் அறியும்.

''அதெல்லாம் வரும்.''

''எப்ப?''

''இங்கனாழ்ச்சம்!''

''எல்லாம் இங்கனாழ்ச்சம்தான்டா உனக்கு! இவனைப் பாரு கனகசபை! எத்தனை சேர்த்து வெச்சிருக்கான் தெரியுமா? எத்தனைடா உண்ணி? ஆயிரத்து ஐநூறு துபாய் போகச் சேர்த்து வெச்சிருக்கான். கன்யாகுமாரில போய் மண்ணு வித்தே ஆயிரம் ரூபாய் பண்ணியிருப்பான்'' என்று உண்ணியின் முதுகில் குத்தினார் சதாசிவம்.

கனகசபை, ''என்ன உண்ணி! அத்தனை காசு இருக்கா உங்கிட்ட?'' என்றான்.

''ஏய்! சதாசிவம் கள்ளம் பறையுன்னு. அத்தரை இல்லா.''

''பொய் சொல்றான். எங்கோ பதுக்கி வைச்சிருக்கான்.''

''உண்ணி! பாதிரியார் கிட்டப் போய் கிரிஸ்டியன் ஆரேன்னு சொல்லு; சட்டை தருவார். அதோட துபாய்க்கு பாஸ்போர்ட் விசா எல்லாம் எடுத்துக் கொடுத்துடுவாரு.''

''டேய் அதைவிட சுலபம்! முஸல்மான் ஆயிடு உண்ணி! உடனே அனுப்பிச்சிருவாங்க!''

''எவிட?''

''சவுதிக்கு. டிரான்ஸிஸ்டர் எடுத்துட்டு வரலாம். டேப் ரிக்கார்டர், வாட்ச். அடுத்த தடவை வரப்போ விவாஹம் கழிக்கலாம்!''

உண்ணி வெட்கப்பட்டான்.

# புத்துணர்ச்சி தரும் தூய சுவாசம்...
# உறுதிமிக்க, ஆரோக்கியமான பற்கள்

## அளித்திடுதே கோல்கேட் டென்டல் க்ரீம்

ஒவ்வொரு சாப்பாட்டிற்குப் பிறகும் கோல்கேட் கொண்டு உங்கள் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். உலகெங்கும் பல் டாக்டர்கள் சிபாரிசு செய்வதைப் போலவே அது உங்களைப் பாதுகாக்கிறது.

உங்கள் பற்களுக்கிடையே தங்கியுள்ள உணவுத் துணுக்குகளில் பாக்டீரியாக்கள் வளர்கின்றன. இவை வாய் துர்நாற்றத்தையும், பிறகு வலிமிக்க பற்சிதைவையும் உண்டாக்கும்.

எனவே சாப்பிட்டு முடித்தவுடனேயே கோல்கேட் முறையில் பற்களைப் பிரஷ் செய்யுங்கள். அது புத்துணர்ச்சியுடன் இனிய சுவாசத்தைத் தருவதற்கும், பற்களுக்கு வெண்மையளிப்பதற்கும், பற்சிதைவை எதிர்ப்பதற்கும் மிகவும் சக்தி வாய்ந்தது என்று நிரூபணமாகியுள்ளது.

**கோல்கேட்டின் புத்துணர்ச்சி தரும், பெப்பர்மின்ட் சுவை பல்துலக்குவதை ஒரு இன்ப அனுபவமாக்குகிறது.**

**சுலபமான, கோல்கேட்டின் செயல் புரியும் முறை**



உணவுத் துணுக்குகள் பற்களுக்கிடையே சிக்கிக் கொள்வதால் துர்நாற்றத்தையும், பற்சிதைவையும் உண்டாக்கும் பாக்டீரியாக்கள் வளருகின்றன.



கோல்கேட்டின் ஒப்பற்ற, செயல்புரியும் நுரை ஆழ ஊடுருவிச் சென்று உபாதை தரும் உணவுத் துணுக்குகளையும் பாக்டீரியாக்களையும் அகற்றி விடுகிறது.



பயன்: கவர்ச்சிமிக்க வெண்மையான பற்கள், தன்னம்பிக்கை தரும் இனிய சுவாசம், பற்சிதைவுக்கெதிரான பாதுகாப்பு.

**கோல்கேட் டென்டல் க்ரீம்**
**உபயோகித்து வாய்துர்நாற்றத்தைத்**
**தடுத்திடுங்கள் பற்சிதைவை**
**எதிர்த்திடுங்கள்**




DC-G-74 TM

உ

தெய்வக்கலை ஜோதிடத்தை தேர்ந்து கற்றிடவே
தேடிவைத்த நேரமிது

# ஜோதிடப்பயிற்சி

(தபால் வழிப் போதனு முறைப் பயிற்சி)

அன்றைய மாமுனிகள் அருளி வைத்த ஜோதிடத்தை — அப்படியே ஆழக் கற்றறிந்து — அனைவர்க்கும் நலம் புரிய, அடுத்து வரும் காலத்தை தெரிந்து கொள்ள அரிய நேரமிது. பாடத்துடன் நாட் குறிப்பும், நல்ல நாள் பட்டியலும் ராஸி பலன் தொகுப்பும், கட்டுரை ஏடுகளும், சந்தேக விளக்கப் பகுதிகளும் அறிந்து தேர்வு பெற அட்டியின்றி துணை இருக்கும். படித்து முடித்தார்க்கு பட்டமும் சான்றிதழும் பாங்குடனே தருகின்றோம்.

சேரும் முறையும் — செலுத்தும் கட்டணமும் அறிய — '90' ந.பை. தபால் தலை ஒட்டிய சுய விலாசமிட்ட கவரிணைத்து 30-8-1982 தேதிக்குள் மனுச் செய்து கொள்க. மாணவர்களின் சௌகர்யத்தை முன்னிட்டு தேதி 30 வரை தள்ளி வைக்கப் பட்டிருக்கிறது. தேதி தவறி வரும் மனுக்கள் ஏற்கப்பட மாட்டா.

பிரபல ஜோதிடர் — ஜோதிட ஆசிரியர்,

## ஸ்ரீமத் ஜெயவீர தேவா

யோகி, ராஜயோகப் பயிற்சியாளர்,

**பிளாட் நெ. 204, கதவு எண் 5, அண்ணா நகர், மதுரை - 625 020**

---

# சென்னை-பம்பாய்-பழனியில் சிகிச்சை



பெறுங்கள். உலக புகழ் பெற்ற பழனி சித்த வைத்தியபதி

**Dr. S. காளிமுத்து,** R.M.P. (IND) V.V.C., A.M.I.H., R.A.M.P., R.H.M.P.,

அவர்களின் சுற்றுப்பயணத்தில் அல்லது பழனியில் நேரில் சந்தித்து ஆலோசனை பெற்று இதுவரை கஷ்டத்துடன் அனுபவித்த வியாதிகள் நீங்கி சுகவாழ்வு பெறலாம்! உங்கள் பிரச்சனையான—தாம்பத்திய வாழ்வில் மாறுபாடு—ஆண்மை குறைவு சோர்வு—அணுக்கள் குறை—வீரியமின்மை-குடும்ப உறவில் முன்மாதிரி செயல்படுத்த முடியாமை நரம்பு துவளல்-தேக உறுப்புகள் மெலிவு-கெட்ட கனவுகள்-தூக்கம் இல்லாமை-குழந்தை செல்வம் இல்லாமை-வெட்கம்-நடுக்கம்-தோல்வி-ஆஸ்துமா இருமல்-வாதநோய்—சருமநோய் — குடல்புண்—வயிற்று கோளாறுகள்—நவமூல வியாதிகள் மற்றும் இதர வியாதிகளும் 85 வருட அனுபவ மருந்துகள் பெற்று சுக வாழ்வும் - மறுமலர்ச்சியும் பெறலாம்.

---

**சென்னை விஜயம் :** *தேதிகள் 10-11 & 17-18-19*

**நியூ உட்லண்ட்ஸ் ஹோட்டல்,** எட்வெர்ட்ஸ் எலியட்ஸ் ரோடு, சென்னை-4 போன்: 83111

---

**பம்பாய் செம்பூர் விஜயம் :** *தேதி 20*

**பிரகாஷ் லாட்ஜ்,** ரயிலடி சமீபம், செம்பூர், பம்பாய்-19 போன் : 521049

---

பழனியில் : 23ந் தேதி முதல் 31ந் தேதி வரை தலைமை ஆபீஸ்—

**பழனி சித்தர் வைத்தியசாலை,** (Regd) பழைய தாராபுரம் ரோடு, பழனி-1

போன் : 316 — 316 வீடு : 420 தந்தி : 'சித்தர்'

---

சென்னை — பம்பாய் — பழனி ஆலோசனை நேரம் : காலை 10 to 12 மணி மாலை 3 to 5 மணி வரை மேலும் நேரில் ஆலோசனை பெற: 13-ந் தேதி: சேலம்-லக்ஷ்மி ராஜ்பவன், மாலை 2 to 4 மணி, 15-ந் தேதி: ஈரோடு-நவபவனம், காலை 10 to 12 மணி, திருப்பூர்-ஸ்ரீ கிருஷ்ணா லாட்ஜ் பகல் 2 to 3½ மணி, பொள்ளாச்சி-கோபால் பில்டிங், மாலை 5 to 6 மணி, 16-ந் தேதி: கோவை விஜயா லாட்ஜ், காலை 10 to 12 மணி 24-ந்தேதி: மதுரை-சந்தானம் லாட்ஜ், காலை 10 to 12 மணி.

---

எமது மருந்துகள் கிடைக்குமிடம் : **கவிதா எண்டர்பிரைசஸ்,**

26, வாலர்ஸ் ரோடு, (மவுண்ட்ரோடு, பி.ஆர். & ஸன்ஸ் அருகில்) சென்னை-2

''தேவகி எப்படி இருக்கு உண்ணி?''

''தேவகி ஏன் இப்பல்லாம் கடைக்கு வர்றதில்லே?''

''கனகசபை! தேவகியைப் பார்த்திருக்கே இல்லே?''

உண்ணி அந்த இடத்தில் மேலும் தங்க விரும்பாதவன் போலப் புறப்பட்டுச் சென்றான். மெல்ல மெல்ல சூரியன் ஆரஞ்சு பெரிசாகிக் கடலில் தங்கம் கரைக்க ஆயத்தங்கள் பண்ணிக் கொண்டிருக்கும் போது ரத்னசாமி திரும்பி வந்தான்.

நாகர்கோயிலுக்குப் போன் பண்ணி, தேவராஜ் அண்ணனைக் கேட்டேன். கனகு கிரிஜா அங்க வரவே இல்லையாம். மூணு மாசத்துக்கு முந்திப் பெரியண்ணன் கல்யாணத்துக்கு வந்ததுதானாம். அப்புறம் வரலேயேங்கறாங்க. கவலைப்படறாங்க. உடனே தகவல் சொல்லுன்னு சொன்னாங்க.''

''அங்க வரலையா?''

''சதாசிவம்! நீங்க எப்ப' கிரிஜாவைப் பாத்திங்க?''

''ஒரு வாரம் முன்னாடி! பூசாரியைக் கேட்டிங்களா?''

கனகசபைக்குச்சட்டென்று வயிற்றில் கலக்கம் சேர்ந்து கொண்டது. 'இப்ப என்ன சொல்றிங்க சதாசிவம்? சரியாச் சொல்லுய்யா. ஏதாவது உங்கிட்டச் சொல்லிச்சா?''

''இல்லேயே! சௌக்கியமான்னு கேட்டேன். சௌக்கியம்னுச்சு. கனகசபை நல்லா இருக்காரான்னு கேட்டேன். லெட்டரே வரலைன்னுச்சு. திருவிழாவில கூடப் பார்த்தமே! தேவகிகூட ராட்டினத்தின் கிட்ட நின்னுக்கிட்டிருந்துச்சு. அதுக்கப்புறம்...''

''எங்க போயிருப்பா! கனகு! கோயில் பட்டில ஒங்க உறவுக்காரங்க இருக்காங்களே ஒருவேளை அங்க போயிருக்குமோ?''

''அங்கல்லாம் தனியாப் போக மாட்டாளே!''

''துணைக்கு ஒரு குட்டி இருக்குமே அதையும் காணமா?''

''பக்கத்து வீட்டில தெரியாதா? சொல்லிட்டுப் போகலையா?''

''சொல்லலிங்க.''

''இருங்க இருங்க. அவசரப்படாதிங்க... நிதானமா யோசிங்க கனகு. தீர விசாரிக்கலாம். உக்காருங்க சொல்றேன்!''

''இப்ப நான் எங்க போய்த் தேடுவேன்? அவளைத் தேட இடம் கூட இல்லையே!''

''ரத்னம்! சரியாக் கேட்டியா? டெலிபோன்ல காதை அழுத்தி வெச்சுக்கேட்டியா? நாகர்கோவில்ல அது இல்லையா?''

''இல்லே சதா!''

''வீட்டில லெட்டர் கிட்டர் எழுதி வெச்சுட்டுப் போயிருக்கா பார்த்திங்களா? கனகு?''

''சரியாப் பார்க்கலே.''

''வீட்ல இல்லேயே?''

''அறிவு கெட்டதனமாப் பேசாதே. வீட்டில இருந்தா அந்தாளு இந்த அலை அலையு வாரரா?''

கனகசபை கடலில் அமிழ்ந்த சூரியனைப் பார்த்துக் கொண்டிருந்தான். ஒரு துண்டு பாக்கி யிருந்தது. அதுவும் மெல்ல மெல்ல கரைந்து கொண்டிருந்தது. அவன் நம்பிக்கை போல! வயிற்றில் ஸ்திரமாக பயம் சேர்ந்து கொண்டு விட்டது. வீட்டுக்குப் போகலாம் என்று தோன்றியது.

''ரத்னம் இங்கேயே இரு வர்றேன்'' என்று வீட்டுக்கு விரைவாக நடந்தான்.

உண்ணி வீட்டிலிருந்து அரிக்கேன் விளக்கு வாங்கிக் கொண்டான். தன் பெட்டியைத் திறந்து டார்ச் எடுத்துக் கொண்டான். அதன் பிரகாசத்தைப் பார்த்து வியந்த உண்ணி ''இது எந்து விலே?'' என்றான்.

டார்ச்சின் மிகப் பிரகாசமான ஒளி வெள்ளம் வீட்டின் பற்பல பகுதிகளைப் பெருக்க, கனகசபை அலமாரியைப் பார்த்தான். உள்ளே இருந்த பீரோவைப் பார்த்தான். பூட்டியிருக்கும் என்று எண்ணி அதன் கதவை முயற்சி செய்து பார்த்தான். திறந்து கொண்டது. பீரோ நிறையப் புடவைகள் அடுக்கி வைத்திருந்தன. பாச்சை உருண்டை வாசனை அடித்தது. கட்டுக் கட்டாக அவன் எழுதிய கடிதங்கள் கிடைத்தன. நகைப் பெட்டி தெரிந்தது. அதைத் திறந்து பார்த்தான். காலியாக இருந்தது. எல்லா நகையும் எடுத்துக் கொண்டு சென்றிருக்கிறாள். ஒரு சின்ன டின் தெரிந்தது. அதன் மேல் மூடியை நீக்கிப் பார்த்தான். பொட்டலம் பொட்டலமாக நிறைய இருந்தது. தனியாக ஒரு போட்டோ இருந்தது. (தொடரும்)

# ஒரு மனிதன்; இரண்டு

ரமா கேட்கதவைத் திறந்து சோர்வுடன் காம்பவுண்டுக்குள் வந்து கொண்டிருந்தாள். பாஸ்கரன் பால்கனியில் நின்றவாறு அவளைக் கவனித்தான். ஆபீஸில் வேலை பார்த்து விட்டு அலுத்துப் போய் வருகிறாள்.

அவுட் ஹவுஸ்தான் அவள் வீடு. அவளுடைய அக்காவுக்குப் பதினெட்டு வயதிலேயே திருமணமாயிற்று. அப்போது அவள் அப்பா வேலை பார்த்துக் கொண்டிருந்தார். லோன் எடுத்து அக்கம் பக்கம் கடன் வாங்கி வரதட்சிணை சீர் கொடுத்துக் கல்யாணம் செய்யச் சித்தமாயிருந்தது. இப்போது அவர் ஓய்வு பெற்று விட்டார்.

இருபத்து மூன்று வயது நிரம்பிக் கல்யாணத்தை ஆவலோடு எதிர்பார்த்துக் கொண்டிருக்கிறாள் ரமா. எத்தனையோ வரன்கள் வந்து போயிற்று. அவளைப் பிடிக்காமல் யாருக்கும் இருக்க முடியாது. கட்டான உடலமைப்பு. தங்கம் போன்ற மஞ்சள் சுடர் தெறிக்கும் நிறம். கவர்ச்சியான முகம்தான்.

அம்சங்கள் அனைத்தும் பொருந்தி இருந்தும் பாவம் ரமா!

இப்படித்தான் ஜயலட்சுமியும்....

என்ன பாடுபட்டாள் ஜயலட்சுமி!

ஜயலட்சுமியின் அப்பா ராகவனும் பாஸ்கரன் தந்தை பத்மநாபனும் ஒரே ஆபீஸில் வேலை பார்த்த இணைபிரியாத நண்பர்கள். காலியான அடுத்த வீட்டைத் தமக்கென்று வாங்கிப் பத்மநாபனைத் தம் பக்கத்தில் குடியேற்றினார் ராகவன். ஒரே ஜாதியினர் குடி இருக்கும் அந்தத் தெருவில் வேற்று ஜாதிக்காரரான பத்மநாபனைக் குடி வைத்ததைக் கண்டு தெருவே ராகவன் மீது பொருமியது.

இரண்டு குடும்பமும் ஒரே குடும்பமாய்ப் பழகியது. பாஸ்கரனும் ஜயலட்சுமியும் குழந்தைப் பிராயத்திலிருந்து ஒன்றாய் வளர்ந்தவர்கள். சேர்ந்து விளையாடினார்கள். ஒரே பள்ளியில் படித்தார்கள்.

எப்படி இருப்பாள் ஜயா. அவளைப் பார்த்துக் கொண்டே இருக்கலாம். அப்படி ஓர் அழகு. எப்போதும் சிரிப்பு, குதூகலம் தான். பள்ளிப் படிப்பைத் தாண்டி, கல்லூரியை முடித்துக் கல்யாணத்துக்குத் தயாராய் வந்தபோதுதான் அவள் சிரிப்பும் கும்மாளமும் மறையத் தொடங்கியது.

முதன் முதலில் ஜயாவுக்குக் கல்யாணம் பேச ஆரம்பித்த நேரத்தில்தான் பாஸ்கரனுக்கு மதுரையிலிருந்து அப்பாயிண்ட்-மெண்ட் ஆர்டர் வந்தது. மகிழ்ச்சியோடு அவளிடம் சொல்லப் போனான். அன்றுதான் ஒரு இன்ஜினீயர் அவளைப் பெண் பார்க்க வந்தான். சிவப்பாய், கருள் கருளான முடியோடு ஜயாவுக்குப் பொருத்தமாக இருந்தான்.

''ஜயா, இஞ்சினீயர் மாப்பிள்ளை! இந்தப் பாஸ்கரனை மறந்துடப் போறே!''

அவன் அவளைக் கேலி செய்தான்.

நாணம் பொங்கப் புது மணம் பெறப் போகும் மகிழ்ச்சியான அவள் முகம் பாஸ்கரனின் நினைவில் இன்னும் நிற்கிறது.

அவன் மதுரையில் வேலை ஏற்றதும் ஜயாவின் கல்யாணம் பற்றி விசாரித்துக் கடிதம் எழுதியிருந்தான். மாப்பிள்ளை வீட்டார் கேட்ட வரதட்சிணை கொடுக்க முடியாததால் அந்தக் கல்யாணம் நடக்கவில்லை என்று பதில் வந்தது அவனுக்கு வேதனையாக இருந்தது. ஜயா எவ்வளவு மகிழ்ச்சியோடு இருந்தாள்? இந்த ஏமாற்றத்தை அவனாலேயே தாங்க முடியவில்லை. ஜயா எப்படித் தாங்குவாள்?

நான்கு வருடங்களில் பாஸ்கரன் படிப்படியாக வளர்ந்து உயர் அதிகாரியாகி விட்டான். அவனுக்குக் கல்யாண ஏற்பாடு நடந்தது. மதுரையிலிருந்து ஊருக்கு வந்திருந்தான். அவன் பெண் பார்க்கப் போகும் இடங்களுக்கு ஒரு லிஸ்டே தயாராக இருந்தது.

மத்தியானம் சாப்பிட்டு விட்டு மாடியில் நின்று கொண்டிருந்தான். தெருவில் ஜயா சோர்வோடு தலை கவிழ்ந்தவாறு வந்து கொண்டிருப்பதைப் பார்த்தான்.

தளிர் போன்று எப்படி இருப்பாள் ஜயா! இப்போது? தளிர் முற்றிக் கறுத்துப் போய்...

''அம்மா...அம்மா....''

தாயிடம் வந்தான்.

''ஜயா தெருவில் போகிறாள். பார்க்கப் பரிதாபமாக இருக்கிறதம்மா!''

''இப்போது ஜயா வேலை பார்க்கிறாள். ஒரு ஜவுளிக் கடையில் சேல்ஸ் வேலைதான்.''

''காலேஜில் படித்தவளுக்கு சேல்ஸ் வேலைதானா கிடைச்சது?''

''அவளைக் கல்யாணம் முடிச்சு அனுப்பணும்னுதான் அவள் அப்பா வேலைக்கு அனுப்பாமல் இருந்தார். அவங்க ஜாதிக்காரங்க சுத்த மோசம். முப்பதாயிரம் அம்பதாயிரம் கேட்டுக் கொள்ளையடிக்கிறாங்க. ஜயாவைப் படிக்க வைக்கவே நிறையச் செலவு செஞ்சாரு அவ அப்பா. அவள் தம்பிக்கு மெடிக்கல் காலேஜில் இடம் கிடைச்சிருக்கு. படிக்கணும்னு ஒத்தைக் கால்ல நிக்கறான். தகப்பன் என்ன செய்வார்? ஜயா நாலு வருஷமா கல்யாணத்துக்குக் காத்திருந்துட்டு வேலைக்கு அலையா அலைஞ்சா. ரெண்டு மாசத்துக்கு முன்தான் ஜவுளிக் கடை வேலை கெடைச்சது!''

''அம்மா, ஜயாவுக்கே கல்யாணம் ஆகலே. நான் எப்படிம்மா கல்யாணம் செய்துக்கறது?''

''உன் அப்பாவும் இப்படித்தான் சொல்றார். ஜயா கல்யாணம் முடிஞ்ச பிறகுதான் உன் கல்யாணத்தை நடத்தணும்னு இவ்வளவு

நான் தள்ளிக்கிட்டே போறேனும். பாவம், அவளுக்கு வேலை வரல்ல. உனக்கு வேலை வரும்போது அதைத் தள்றது நல்லதா?''

பாஸ்கரன் பெண் பார்க்கச் சென்றான். நான்கு இடங்கள். போன இடம் எல்லாம் பங்களாக்கள். ஐம்பது பவுன் நகையும் இருபதாயிரம் ரொக்கமும் தருவதாக ஆசை காட்டினார்கள்.

''அப்பா, நாம் நடுத்தர வர்க்கம். இவ்வளவு பெரிய இடம் நமக்கு அவசியமா?'' என்று தந்தையிடம் கேட்டான் பாஸ்கரன்.

**பா**ஸ்கரன் கடை வீதியில் வந்துகொண்டிருக்கும்போது ஐயாவைச் சந்தித்தான்.

''நான் வந்து அங்க நாளாச்சு....''

''தெரியும். உங்களுக்குப் பெண் பேசிக்கிட்டிருக்காங்க. பார்க்கிற வரனெல்லாம் தட்டிக்கிட்டே போறதுக்கிரி நான். அதுதான் உங்க கண்ல படாமல் ஒதுங்கினேன்.''

''வா, டிபன் சாப்பிடலாம்.''

பக்கத்திலிருந்த ஹோட்டலுக்கு அழைத்தான் பாஸ்கரன்.

''உன் கல்யாணத்துக்காக உன் அப்பா படற கஷ்டத்தைக் கேள்விப் பட்டேன். எனக்குச் சங்கடமாக இருந்தது.''

''பாஸ்கர், நேற்று என்னைப் பெண் பார்க்க வந்தாங்க. என் கல்யாணம் செட்டிலாயிடுச்சு.''

''உண்மைதானா? மாப்பிள்ளைக்கு என்ன உத்தியோகம்?''

அவள் விரக்தியாகச் சிரித்தாள். அந்த நேரத்தில் வந்த சர்வரைப் பார்த்ததும் மிரண்டாள். வந்த வேகத்தில் சர்வர் போய்விட்டான்.

''பாஸ்கர், எனக்கு வரப் போறவர் ஹோட்டல்ல வேலை பார்க்கிறதாச் சொன்னாங்க. ஆனா இந்த ஹோட்டல்ல நமக்கே சர்வ் பண்ணுவாருன்னு நான் எதிர்பார்க்கவே இல்லே.''

''இவனா....''

ஒல்லியாய், வளர்த்தியாய், கொக்குபோல் இருந்தான். ஐயாவைப் பார்த்துவிட்டானோ என்னவோ வேறு சர்வர் வந்து பரிமாறினான்.

''ஐயா, இவன் உனக்கு மாட்சே இல்லையே. நீ படித்தவள். உன் படிப்புக்குத் தகுந்தபடி வாழணும் என்ற எண்ணத்தை நீ வளர்த்துக் கொண்டிருப்பாய் இல்லையா?''

''பாஸ்கர், வரதட்சிணை தரத் தகுதி இல்லாத போதுகல்யாணச் சந்தையில் என் படிப்புக்கும் அழகுக்கும் மதிப்பில்லே. ரெண்டாந் தாரமா நாற்பத்தஞ்சு வயசுக்கு மேற்பட்டவருக்கு வாழ்க்கைப்படணும். படிக்க வேண்ணாலும் இவருக்கு முப்பது வயசாகிறது. நோஞ்சானாக இருந்தாலும் இருநூறு ரூபாய் சம்பளம் வாங்கறார். என் சம்பளம் நூத்தம்பது ரூபாய். ரெண்டு பேர் வயிறும் நிரம்பிடாதா? கல்யாணம் என்ற முடிச்சைப் போட்டுக் கொண்டு ஆண்பிள்ளை என்ற ஒருவரோடு நான் போய்த் தானே தீரவேண்டும்?''

**ஐ**யாவுக்குக் கல்யாணம். பந்தலில் தெருக்காரர்கள் உறவினர்கள் நிறைந்திருந்தனர். ஐயா மனையில் அமர்ந்தாள்.

மாப்பிள்ளையின் தகப்பனார் ''முதலில் பணத்தைக் கொண்டு வாங்க'' என்றார்.

ஒரு தட்டில் பழம், வெற்றிலைக்கு நடுவில் பத்து ரூபாய்க் கட்டுக்களை வைத்துச கொண்டு வந்தார்.

''எவ்வளவு பணம் வச்சிருக்கீங்க?''

''மூவாயிரம் ரூபாய்.''

''ஐயாயிரமா வையுங்கோ.''

''நாம் பேசிக் கொண்டது மூவாயிரம் தானே?''

''பல விஷயங்களை நீங்க மறைச்சிருக்கீங்க. பையன் அப்பளத்தில் இளம் ஜோடி! ரியல் எஸ்டேட் அதிபர் திரு கே. வி. ராம் அவர்களுடைய மகள் திருமணத்தில் பொரித்த அப்பளத்தில் மணமகன் — மணமகள் இருவருடைய பெயரும் ஒரு இளஞ் ஜோடியின் உருவமும் அச்சிடப்பட்டிருந்தது. அப்பளத்தை நொறுக்கவே மனம் வரவில்லே, —கலாமூர்த்தி ''இந்தப் பெண்ணே வேண்டாம்'' என்றான். நாங்கதான் சரிக்கட்டிக் கூட்டி வந்திருக்கோம். ஐயாயிரம் தந்தால் தான் பையன் மணவறையில் உட்காருவான்.''

''நான் எதை மறைச்சேன்? முதலில் அதைச் சொல்லுங்கோ.''

''டேய் பையா! நீயே சொல்லுடா.'' தகப்பனார் மகனை நோக்கிச் சொன்னார்.

''உங்க பொண்ணு ஒரு வாலிபனோட ஹோட்டல்லாம் சுத்துது'' என்றான் மாப்பிள்ளை.

''வீண் அபவாதத்தைக் கிளப்பாதீங்க.''

''உங்க பொண்ணு கிட்டயே கேட்டுப் பாருங்க.''

''ஐயா....'' தவிப்போடு மகளை நோக்கினார்.

நிலைமையை உணர்ந்த பாஸ்கரன் ''மாமா நான் சொல்கிறேன். ஐயாவைப் பஜார்ல பார்த்தேன். பக்கத்தில் ஹோட்டல் இருந்ததால் டிபன் சாப்பிட நான்தான் அவளைக் கூட்டிக்கிட்டுப் போனேன். இதை ஒரு அபவாதமாச் சொல்றீங்களே!'' என்றான்.

''பாஸ்கர், நீ கூட்டிக்கிட்டுப் போனதில் தப்பே கிடையாது. அதை எந்தக் கண் கொண்டு பார்த்திருக்காங்க பார்த்தியா?'' என்றவர், மாப்பிள்ளைப் பையனைப் பார்த்து, ''என் பெண்ணுக்கு நீ எந்த விதத்தில் தகுதி? அப்படி இருந்தும் உனக்குக் கொடுக்கதுணிஞ்

ஒரு நிமிட நேரத்திற்குள் அகர வரிசையில் பன்னிரண்டு திரைப் படங்களின் பெயர்களை அடுக்கிக் கூற முடியுமா? முயன்று பாருங்கள். முடியாவிட்டால் 36 பக்கத்தில் உள்ள மாதிரி விடையைப் பார்த்துக் கொள்ளுங்கள்.



சேனே; என் புத்தியைச் செருப்பாலடிக்கணும். என் பெண்ணை உனக்குக் கொடுக்கிறதா இல்லே, நீ போகலாம்'' என்று முகத்திலடித்தது போல் கூறினர்.

மாப்பிள்ளை வீட்டார் அதிர்ந்தனர். சமாதானத்துக்கு வந்து பார்த்தனர். ''வெளியே போங்க'' என்று கூச்சலிட்டு விரட்டிவிட்டார்.

சபை கலைய ஆரம்பித்தது.

''ஒருவரும் போக வேண்டாம். என் பெண் கல்யாணம் நடக்கத்தான் போகிறது'' என்று எல்லோரையும் அமர்த்திவிட்டு ராகவன் பத்மநாபனிடம் வந்தார்.

''எங்க ஜாதிக்காரங்க என்னைக் கைவிட்டுட்டாங்க, பாஸ்கருக்கு ஜயாவைக் கல்யாணம் பண்ணி வச்சிடலாம் என்ன சொல்றே?''

ஒரு கணம் அதிர்ந்துபோன பத்மநாபன் ராகவனைக் கேள்விக் குறியுடன் பார்த்தார்.

''அப்பா தயங்காதிங்க. நம்ம ஜயா ஒரு கண்டத்திலிருந்து தப்பியிருக்கா, நாம் கை விட்டு விட்டோம்னு அவள் படுகுழியில் தான் விழனும்.'' என்ருன்.

''ராகவா! ஜயா எங்க மருமகளானல் அதைவிட வேறு மகிழ்ச்சி எங்களுக்கு இடையாது. திடீரென்று ஜாதி மீறுவதில் ஒரு தயக்கம் ஏற்பட்டுடுச்சு. கல்யாணம் நடக்கட்டும்'' என்ருர் பத்மநாபன்.

மணவறையில் ஜயாவின் பக்கத்தில் பாஸ்கரன் அமர்ந்தபோது சபையில் பரபரப்பு.

''வேறு ஜாதி மாப்பிள்ளையா? இதை ஒப்புக்கொள்ள முடியாது'' — ஒரு குரல். அவர் பெரும் செல்வந்தர். அந்த ஜாதி சங்கத்துக்குத் தலைவர். பண்ணை வீட்டு ராமானுஜம். அவரோடு சாதி வெறியில் பலர் வெளியேறினர். இருக்கிறவர்கள் வாழ்த்த பாஸ்கரன் ஜயாவின் கழுத்தில் மூன்று முடிச்சுக்களைப் போட்டான்.

**''எ**ன்னங்க தெருவையே பார்த்துக்கிட்டிருக்கீங்க?''

ஜயா பாஸ்கரன் பின் வந்து நின்ருள்.

''ரமா ஆபீசிலிருந்து வர்றதைப் பார்த்தேன். உன் நினைப்பு வந்தது.''

''பாவம் ரமா! முன்னுல நான் கல்யாணத்துக்குத் தவிச்ச மாதிரி நிக்குது! எனக்கு ஒரு யோசனை தோணுது. என் தம்பி ரவிக்கு ரமாவைபேசலாம்னு நினைக்கிறேன்.''

''ஊர்ல அவன் பெரிய டாக்டரா இருக்கான். உன் அப்பா ஒப்புக்கொள்வாரா?''

''அப்பா அனுபவப்பட்டவர். நீங்க வரதட்சணையும் ஒரேயடியா வேண்டாம் என்றதால்தானே என் கல்யாணத்துக்குச் சேர்த்து வச்சிருந்த பணத்தால் தம்பி படிச்சு டாக்டராக முடிஞ்சது?''

''அப்படின்னு முயற்சி செய்து பார்.''

ஜயா தந்தையைப் பார்க்க ஊருக்குப் போனுள். வீட்டு வாசலில் ஒரு கார் நின்று கொண்டிருந்தது. அப்பாவும் பண்ணை வீட்டு ராமானுஜமும் சிரித்தவாறு பேசிக்கொண்டே வீட்டுக்குள்ளிருந்து வந்தனர். ராமானுஜம் காரில் ஏறிச் சென்ருர்.

ராகவன் ஜயாவைக் கண்டதும் ''வா, ஜெயா, நல்ல சமயத்தில் வந்தே!'' என்று வரவேற்ருர்.

''ராமானுஜம் உங்களைத் தள்ளி வச்சிருந்தாரே, எப்படி வந்தார்?'' ஆச்சரியத்தோடு கேட்டாள்.

''உன் தம்பி இப்போது பெரிய டாக்டர் இல்லையா? அவருக்கு ஒரே பொண்ணு. எக்கச்சக்கமான சொத்து! உன் தம்பி அதிர்ஷ்டக்காரன்!''

ஜயாவின் முகம் தாழ்ந்தது.

''ஜயா, பண்ணை வீட்டுக்காரர் நம்மைத் தேடி வந்தது பெரிசு. ஏதோ அந்த நேரத்தில் எழுந்த வேகத்தில் உன்னை மாற்று ஜாதியில் கட்டிக் கொடுத்திட்டேன். ராமானுஜத்துக்கு அதுதான் கொஞ்சம் உறுத்தலாக இருக்கு. கல்யாணச் சபையில் உன் மாப்பிள்ளை நின்னு அவருடைய கௌரவத்துக்குக் குறைவா இருக்கும்னு நினைக்கிருர். இந்தச் சிக்கலை நீதான சமாளிக்கணும்...''

''அப்பா....!''

''உன் மாப்பிள்ளைக்கு ஆபீசில் நிறைய வேலை இருக்கும். அதைச் சாக்கு வச்சு கல்யாணத்தன்னிக்கு மட்டும்....''

கண்களில் நீர் கசியத் தந்தையை நிமிர்ந்து பார்த்தாள் ஜயா. அன்று ஒரு பெண்ணைக் கரை சேர்க்க வகை இல்லாமல் தவித்து நின்றவரா இவர்? டாக்டரான ஒரு ஆண் மகனுக்கு அப்பாவாய் இருக்கிற பேராசை பூதமாகத் தோன்றினர்.

''அப்பா, அவர் வரமாட்டார், நானும் வரவில்லை.'' இரண்டேவாக்கியங்கள்தான் சொன்னுள்.

அந்ததிசைக்குப் பெரிய கும்பிடு போட்டுவிட்டு வேகமாக மதுரை நோக்கித் திரும்பிக் கொண்டிருந்தாள் ஜயா.





M-87 நட்சத்திரக் குடும்பம்




தன் பாதையில் சிவனே என்று சுற்றிக் கொண்டிருந்த அந்த நட்சத்திரம் திடீரென்று ஆட்டம் காண்கிறது. அதன் பாதை வழக்கத்துக்கு விரோதமாகத் தாறுமாறுகிறது. எங்கிருந்தோ ஒரு விசை இந்த நட்சத்திரத்தை இழுக்க ஆரம்பிக்கிறது. சுதாரிக்க முடியாத நட்சத்திரம் அந்த மரண விசையால் ஈர்க்கப்பட்டு சுக்கு நூருகிச் சிதறி... கண்ணுக்குப் புலப்படாத அந்த வஸ்துவால் கபளீகரம் செய்யப்படுகிறது!

அந்த வஸ்துவுக்கு விஞ்ஞானிகள் கருப்புப் பள்ளங்கள் (Black Holes) என்று பெயர் சூட்டியிருக்கிறார்கள். கருப்புப் பள்ளங்கள் விண்வெளியையே வளைக்கும் அளவு ஈர்ப்பு விசை பெற்றவை. காலத்தையே இரிக்கக் கூடியவை. பொருள்களை உறிஞ்சக் கூடியவை. இந்தக் கருப்புப் பள்ளங்கள் விண்ணில் எப்படித் தோன்றுகின்றன?

மிக வயதான நட்சத்திரம் தன் காலம் முடிந்தவுடன் தன் நெருப்பு விரல்களை இழுத்து அணைத்துக் கொள்கிறது. உடனே நட்சத்திர வெளிப் பகுதி சிதைய ஆரம்பித்து நட்சத்திரத்தின் உள் நோக்கி இழுக்கப்படுகிறது. இதனுல் அணுக்கள் ஒன்றுடன் ஒன்று நெருக்கமாகத் தள்ளப் படுகின்றன. நட்சத்திரம் முன்பை விடச் சுருங்குகிறது. நியூட்டன் விதிகளின்படி நட்சத்திரத்தின் புவி ஈர்ப்பு விசை ஏராளமாகிறது. அணுக்களின் இடைத் தூரம் குறையக் குறைய ஈர்ப்பு விசை நான்கு மடங்குக்கு மேலாகிறது. மேலும் நட்சத்திரம் சுருங்கச் சுருங்க அதன் அடர்த்தி அதிகரித்து எடை அதிகரிக்கிறது. எனவே மையப் புவிஈர்ப்பு விசை மேலும் அதிகரிக்கிறது. எனவே வெளிப் பகுதி முன்னிலும் விரைவாகச் சிதைந்து உள் நோக்கிச் சுருங்க, ஈர்ப்பு விசை மேலும் அதிகரிக்கிறது. எனவே அடர்த்தி மேலும்...ஈர்ப்பு விசை மேலும்.....எனவே மேலும்.... மேலும்....

சூரியனைப் போல பல மடங்கு பெரிதாக இருந்த நட்சத்திரம் இப்போது ஒரு கால் பந்தளவு சுருங்கி (இப்போது அதன் அடர்த்தியைக் கற்பனை செய்து பாருங்கள்) எல்லா எலக்ட்ரான்களும் அணு மையத்திலுள்ள

கருப்புப் பள்ளத்தின் முதல் வண்ணப் படம்!



புரோட்டான்களுடன் நெருக்கப்பட்டு நியூட்ரான்களாக மாறுகிறது. நியூட்ரான் நட்சத்திரமாகிறது. இப்பொழுது நொடி நேரத்துக்குள் நட்சத்திரம் ஒளியின் வேகத்தில் தன் கடைசிச் சிதைவை அடைந்து எண்ணற்ற அடர்த்தி பெற்றுக் கண்ணுக்குத் தெரியாமல் மறைகிறது. புதிய கருப்புப் பள்ளம் பிறக்கிறது.

இது போல கருப்புப் பள்ளங்கள் ஒவ்வொரு நட்சத்திரக் குடும்பங்களிலும் காணப்படுகின்றன. இவற்றின் ஈர்ப்பு விசை கணக்கிலடங்காத அளவு உள்ளதால் சாதாரண ஒளியலைகளைக்கூட கவர்ந்து கொள்கின்றன. எனவே இவற்றைப் பற்றிய செய்தி

களை அறிவது அரிதாகவே இருந்தது. அப்படியும் நம் விஞ்ஞானிகள் புது முறைகளைக் கண்டறிந்து கருப்புப் பள்ளங்களின் இருப்பிடத்தை அறிந்து வருகிறார்கள்.

அதீத ஈர்ப்பு விசை காரணமாக கருப்புப் பள்ளங்கள் அருகாமை நட்சத்திரத்தின் சுற்றுப் பாதைகளை அலைக்கழிக்கின்றன. இதை வைத்து விஞ்ஞானிகள் கருப்புப் பள்ளம் பக்கத்தில் உள்ளதை உணர்கிறார்கள். பொருள்கள் கருப்புப் பள்ளத்தில் விழுகையில் பில்லியன் டிகிரிக்கு மேலாக சூடாகிறது. இந்த அதீத வெப்பத்தில் பொருள்கள் சிதைந்து சக்தி வாய்ந்த எக்ஸ்-கதிர்களை விண் பூராவும் வீசுகின்றன. இந்த எக்ஸ் கதிர்களை நம் பூமியின் காற்று மண்டலம் அனுமதித்து வரவேற்கிறது. இந்த விருந்தாளிகளைச் செயற்கைக் கோள்களில் தயாராகஇருக்கும் எக்ஸ்ரே உணர்வான் உறிஞ்சி, நம் விஞ்ஞானிகளுக்குக் கருப்புப் பள்ளங்களைப் பற்றிய ரகசியத்தைச் சொல்கிறது.

நாஸா (NASA)வில் 1970ல் முதன்முதலாக விண்ணில் பறக்க விடப்பட்ட ''உஹுரு'' என்ற எக்ஸ்ரே செயற்கை கோள் தன் விரவை உணர்வானைக் கொண்டு விண்ணிலுள்ள 339 எக்ஸ்ரேக்களை வெளியிடும் நட்சத்திரங்களை அடையாளம் காட்டியது. இதில் ஒன்று ஸைனஸ் X-1 (cygnus X-1) என்ற நட்சத்திரம். சூரியனை விட 20 மடங்கு பெரியதும், பூமியிலிருந்து 8000 ஒளி ஆண்டுகள் தொலைவில் உள்ளதுமான (ஒரு ஒளி ஆண்டு = ஒளி ஒரு ஆண்டில் பயணம் செய்யும் தூரம்) ஒரு நட்சத்திரத்தின் கருப்புப் பள்ளம்தான் ஸைனஸ் X-1. ஃபிரிஜ் பேசுகிறது! (ஜப்பான்காரர்கள் எதையாவது கண்டு பிடித்துக் கொண்டே இருக்கிறார்கள். நாம் அதைப் பற்றிப் பத்திரிகைகளில் எழுதிச் சந்தோஷப்பட்டுக் கொள்கிறோம்.)

இப்போது ஜப்பானில் புதிய கண்டுபிடிப்பு பேசும் ஃபிரிட்ஜ். 15 செகண்டுக்கு மேல் திறந்திருந்தால் கதவை மூடச் சொல்லுமாம். அதற்கு மேலும் திறந்திருந்தால் கதவு திறந்திருப்பதை அறிவித்துக் கொண்டிருக்குமாம். இதனால் மின்சாரம் வீணாவது தடுக்கப்படுகிறது. என்கிறார்கள். —பாத்திமுத்து

இன்னொரு கருப்புப் பள்ளம் M-87 என்ற நட்சத்திரக் குடும்பத்தில் உள்ளது. இரண்டு விஞ்ஞானிகள் குழு தனித்தனியே M-87 பற்றி ஆராய்ந்தனர். வெவ்வேறு சோதனை முறைகளைக் கையாண்ட போதிலும் இரண்டு குழுக்களின் முடிவுகளும் பலவிதத்தில் ஒத்துப் போயின. M-87ன் இருப்பிடம் இருவராலும் ஒரே மாதிரியாகக் கணக்கிடப்பட்டன. M-87ன் கருப்புப் பள்ளம் அதீத நிறை உள்ளது. இதன் எடை $10$[illegible] $M_\odot$ ($M_\odot$ = சூரியனின் எடை).

கருப்புப் பள்ளங்களைப் பொறுத்தவரை எல்லாம் ஒன்வே டிராபிக்தான். பொருள்கள் சக்தி ஒளி எல்லாம் உள்ளே மட்டும் போகும். வெளியே வர முடியாது. இருந்தும் கருப்புப் பள்ளங்களிலிருந்து சக்தியை எடுக்க விஞ்ஞானிகள் முயன்று வருகிறார்கள். பொருள்கள் கருப்புப் பள்ளத்தில் விழுகையில் அதீத சக்தி வெளிப்படுகிறது. இப்படி ஒரு செகண்டுக்கு வெளியாகும் சக்தியைக் கொண்டு பூமியில் உள்ள அனைத்து வாகனங்களையும் நாளுக்கு 100 கி. மீ. தூரம் வீதம் 100 பில்லியன் ஆண்டுகள் ஓட்டலாம். (அராபிய ஷேக்குகள் கவனிக்க)

மேலும் கருப்புப் பள்ளங்கள் சுழல்வதால் உண்டாகும் சுழற்சி விசையைப் பயன்படுத்தும் முறைகளையும் ஆராய்ந்து வருகிறார்கள். ஒரு ராக்கெட் கருப்புப் பள்ளத்தின் ஈர்ப்பு விசைப் பகுதிக்குள் அதன் வெளிப் பரப்பை நோக்கிப் பறப்பதாகக் கொள்வோம். இப்போது கருப்புப் பள்ளம் $9 \times 10$[illegible] $M/S^2$ உந்து விசையை ராக்கெட்டுக்கு அளிக்க வல்லது.

இதுபோல கருப்புப் பள்ளங்கள் நட்சத்திரத்துக்கு ஒன்றாக பிரபஞ்சத்தில் கோடிக் கணக்காக உள்ளனவாம். பிரபஞ்சமே ஒரு கருப்புப் பள்ளம் என்ற ஒரு வாதமும் உண்டு. ஒரு காலத்தில் பிரபஞ்சமே அழிந்து கருப்புப் பள்ளமாகி விடுமாம். இதுமட்டுமின்றிப் பொருள்களை உண்டாக்கக் கூடிய வெள்ளைப் பள்ளங்கள் (White holes) வேறு உண்டாம். இவை நிலையற்றவை. விரைவில் கருப்புப் பள்ளங்களாக மாறிவிடக் கூடியவை. சில நிலையான வெள்ளைப் பள்ளங்களும் உள்ளனவாம். அவற்றுக்குச் சாம்பல் நிறப் பள்ளங்கள் Grey holes என்று பெயர்!

இந்தப் பிரபஞ்சம் நாம் நினைப்பதை விட ஆச்சரியங்கள் நிறைந்தது மட்டுமல்ல. நாம் நினைக்க முடியாத அளவு அதிசயங்களைக் கொண்டதும் கூட!

-நளினி சாஸ்திரி



ஒரு அராபிய ஷேக்:

''அப்படியானால் கருப்புத் தங்கம் வற்றிப் போவதற்குள் முடிந்த அளவு கருப்புப் பள்ளங்களை வாங்கிப் போட்டு விட வேண்டியதுதான்''

நன்றி: சயன்ஸ் டுடே

"தேச பக்தி,
ஒருமைப்பாடு,
ஒழுக்கம் எல்லாம்
செத்து மடிஞ்சுபோய்
விட்ட துக்கத்தை
அனுஷ்டிக்கவோ,
என்னவோ,
கொடிக்கம்பத்தில்
பாதிக்கு மேலே
கொடி ஏறவே
மாட்டேங்குதே!"

# 'ஈ நாடு!'

இந்த
ஈத் தொல்லை
எப்பத்தான் தீருமோ?

பாரத
மக்கள்

எனப்படும் சாந்தி முகூர்த்தம் நடத்தப் பட்டது. இதை திரிராத்ரி பிரம்மச்சர்யம் என்பார்கள். பின்னர்சேஷஹோமம் செய்தே சாந்தி முகூர்த்தம் நடத்தப்படும். இப் பொழுது பெரும்பாலான திருமணங்களில் அன்றிரவே முதலிரவு கொண்டாடப்படு கிறது. அந்த இன்பத்திலும் கூட சமுதாயத் துக்குக் கட்டுப்பட்டவர்களாக, கடமைப் பட்டவர்களாகவே மணமக்கள் விளங்கு கிறார்கள். அவரவர் உடலின்பம் வேண்டி ஒன்று சேரவில்லை. நல்ல ஆரோக்கியமான, மனோபலம் மிகுந்த மக்கள் வேண்டியே இரு வரும் இணைகிறார்கள்.

மனிதன் கருவுயிர்ப்பதிலிருந்தே அவன் கவனிக்கப்படுகிறான். அவன் எப்படி வாழ வேண்டும் என்று நிர்ணயிக்கப் படுகிறான். அவனுக்கான கடமைகள் போதிக்கப்படுகின் றன. இதைத்தான் நம்முடைய சாஸ்திர சம்பிரதாயங்கள் போதிக்கின்றன. எங்கு எங்குஎந்தெந்தசிறப்புக்கள்இருக்கின்றனவோ அவற்றை யெல்லாம் அறிந்து கொண்டுவிட வேண்டும் என்று துடிக்கிறோம். மேலை நாட்டு இலக்கியங்களை அறிவுப் பசிக்காகப் படிக் கிறோம். விஞ்ஞானத் தொழில் நுட்பங்களைத் தெரிந்து கொள்கிறோம். மொழி புரியவில்லை யென்று விட்டு விடுவதில்லையே?

மனதிற்குச் சாந்தியும், உலகிற்கு அன்பை யும், ஆதரவையும், கடமைகளையும் உணர்த் தும் வாழ்வோடு பிணைந்து நிற்கும் சாஸ்திர சம்பிரதாயங்களை மட்டும் அறிந்து கொள்ளா மல் ஒதுக்குவது எந்த வகையில் நியாயம்?

படம்: உத்ரா

(கட்டுரைக்கு உதவியவர்கள்: கே.வி. சேஷாத்ரிநாத சாஸ்திரிகள், எம். வி. ரகுபதி சாஸ்திரிகள்)



இங்கே மடிக்கவும்



‘இந்து மதத்தில் சாஸ்திரங்களும், சம்பிரதாயங்களும் அதிகம். அதிலே மூட நம்பிக்கைகளோ ஏராளம். இவை யெல்லாம் இன்றைக்குக் கவைக்கு உதவாதவை. நாகரிகமும் விஞ்ஞானமும் எவ்வளவோ முன்னேறிப்போன இந்தக் காலத்தில் இதை யெல்லாம் கடைப்பிடிக்க வேண்டுமா?’

நாத்திகன் என்றில்லை. ஓரளவு படித்து விஞ்ஞான பூர்வமாகச் சிந்திக்கிறவர்களும் இன்றைக்குக் கேட்கிற கேள்வி இது. உண்மைதான். வேத காலத்திலிருந்து வருகின்ற இந்த சாஸ்திரங்களும், சம்பிரதாயங்களும் இன்றைக்குத் தேவையில்லைதான். ஓரளவுக்கு... முழுமையாகத் தேவையில்லை என்று சொல்லி விட முடியாது.

ஒரு பொருள் வேண்டியதில்லை என்று நாம் எப்பொழுது ஒதுக்குகிறோம்? அந்த ஒன்றைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டு, அது நமக்குப் பயன்படாது அல்லது முழுமையாகப் பயன்படுத்திக் கொண்டு விட்டோம். அதாவது அதன் பயன்பாடு முடிந்து விட்டது என்னும்போது ஒதுக்குகிறோம். ஆனால் நம்முடைய சாஸ்திர, சம்பிரதாயங்களைப் பற்றி எவ்வளவு தூரம் அறிவோம்? தெரியாது! ஆனாலும் ஒதுக்குகிறோம்.

எனவேதான் இங்கு ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையின் முக்கியத் திருப்பு மையமான திருமணத்தின் சாஸ்திர, சம்பிரதாயங்கள், அதை யொட்டிய இன்றைய சட்டங்கள் இவற்றைப் பற்றிச் சொல்கிறோம்.

## அது என்ன சாஸ்திரம், சம்பிரதாயம்?

சாஸ்திர சம்பிரதாயம் என்று சொல்கிறோம். இரண்டும் வெவ்வேறு, ஒன்று? சாஸ்திரம் என்பது வேதம் சொல்லுபவை. அந்தக் காலத்திய சட்டமான வேதம் இவை இவை இப்படி இப்படி நடக்க வேண்டும் என்று நெறிமுறைகளைக் கூறுகிறது. சம்பிரதாயம் என்பது அதனுடைய செயல்பாடுகள் (அ) வழி முறைகள்.

அதாவது, நாம் ஒரு கல்லூரியில் சேருகிறோம் என்று வைத்துக் கொள்வோம். சட்டங்கள் வழி வகுத்து வைத்திருக்கின்றன. கல்லூரி என்பது இப்படி இருக்க வேண்டும், இத்தனை மணி நேரம் பாடம் போதிக்க வேண்டும், இத்தனை மாணவர்களுக்கு இவ்வளவு ஆசிரியர்கள்... இவை யெல்லாம் சட்டங்கள். அந்தக் கல்லூரியில் நாம் சேருவதற்கு விண்ணப்பம் போடுகிறோம். தேர்வு



‘மூர்தாணம் பட்யுரா ரோஹா
பிரதயாச விராட்பவ
சம்ராக்யே ஸ்வஸ்வரா பவ’

என்று தொடங்கும் இந்த ஸ்லோகம், ‘‘நீ உன் கணவன் இல்லத்தின் ராணியாக விளங்கு. உன் கணவன் உன் குணநலன்களைத் தலையில் வைத்துக் கொண்டாடட்டும். மாமியார் உன்மேல் அன்பு செலுத்தும்படி நடந்துகொள்வாயாக. நாத்தனாரிடம் நல்ல பெயர் வாங்கு'' என்று அறிவுரை கூறுகிறது.

## நலுங்கு

திருமணம் முடிந்து ஓய்வு எடுத்துக்கொள்கிறான் கணவன். மாலை வேளை. மேற்கொண்டு மாலை நேரத்தைக் கொண்டாட விரும்புகிறாள் மனைவி. புறப்பட்டு விடுகிறாள்.

காலையில் மாலை மாற்றும்போது பெண்ணுக்கு மாமன் உதவி செய்கிறான். மணமகன் தாலி கட்டும்போது தந்தையின் மடியிலிருந்தே தாலி அணிந்து கொள்கிறாள். லாஜ ஹோமத்துக்கும் துணையாகத் தமையன் வருகிறான். இப்படிக் கொஞ்சம் கொஞ்சமாகப் பிறந்த வீட்டை விட்டு விலகிக் கணவனை நெருங்கும் மணமகள் மாலையில் நலுங்கிற்கு அழைக்கக் கணவனை நாடிச் செல்கிறாள். தனது அழைப்பைப் பாகரமாக அமைத்துப் (பத்யம்) பாடுகிறாள். எனினும் அங்கும் தோழிகள் புடைசூழவே நலுங்கு நடைபெறுகிறது.



இன்றைய நாகரிக வாழ்வில் ரிசப்ஷன் எனப்படும் வரவேற்பு தரப்படுகிறது. காலையில் நாணப்பட்ட மணமகள் மாலையில் கணவனுடன் சகஜமாகப் பேசுவதையும், நண்பர்களை, தோழிகளை அறிமுகப்படுத்தி வைப்பதையும் காண்கிறோம்.

பழங்காலத்தில் மூன்று நாட்கள் திருமணம் முடிந்த பிறகே கர்ப்பாதானம்

அப்படிக் கன்னிகையைக் காத்துத் தன்னிடம் ஒப்படைத்ததால், கணவன் அவள் தன்னிடம் வந்தவுடன் முதலில் அவர்களுக்கு நன்றிக்கடன் செலுத்துகிறான்.

தம்பதியர் இருவரும் அக்னி வளர்த்து அவர்கள் மூவருக்கும் அவிர்ப்பாகம் அளிக்கின்றனர்.

## லாஜ ஹோமம்

சட்டப்படியும் தருமப்படியும் சப்தபதியில் இருவரும் ஒன்றான பிறகு சேர்ந்து செய்யும்



இரண்டாவது ஹோமமே 'லாஜ ஹோமம்' எனப்படுவது. இங்கு மனைவி அன்புடன் மலர்ந்த நெல் பொரியை எடுத்து வழங்க, அதை அக்னிக்கு உணவாக இட்டு அக்னியை வளர்க்கிறான் கணவன்.

இதுவும் ஒருவகை நன்றிக் கடன் போன்றதே. இனி அவர்கள் வாழ்வு முழுவதற்கும் துணை புரிபவன் அக்னியே. எனவே தம்பதிகள் இருவரும் இணைந்து அக்னிக்கு விருந்தோம்பல் செய்கிறார்கள். இந்த ஹோமத்தின்பொழுது மணமகளின் உடன் பிறந்தவனும் இருந்து உதவி செய்கிறான். சப்தபதி முடிந்து கணவனின் குடும்பத்தோடு அவள் இணைந்து விட்டாலும் பிறந்த வீடு மறப்பதற்கில்லை என்பதை உணர்த்துகிறது.

இந்த ஹோமம் முடிந்தவுடன் அவள் புகுந்த வீட்டுக்குப் புறப்பட்டு விடுகிறாள். அதுவரையிலும்தான் பிள்ளை வீட்டார் பெண் வீட்டிலும் இருக்க வேண்டும். இக்காலத்தில் மறுநாள் வரை இருந்து பெண் வீட்டாரைக் கசக்கிப் பிழிந்து வசூலிப்பதைச் சொல்லவில்லை வேதம். லாஜ-ஹோமத்தில் விளைந்த அக்கினியை எடுத்துக் கொண்டு கிரகப் பிரவேசம் செய்கிறாள் மணப் பெண். அன்னை தன் மகளுக்குப் புத்திமதி சொல்வது போல வேதம் அன்புடன் அவளை வழி அனுப்பி வைக்கிறது.



முடிந்து கல்லூரியில் சேருகிறோம். பயிலுகிறோம். இவையெல்லாம் நடைமுறையில் இருப்பவை. இதே போலத்தான் வேதம் சட்டத்தைக் கூற, சம்பிரதாயங்களால் அச்சட்டத்தின் பலன்கள் பூர்த்தியாகின்றன.

திருமணத்தில் வேதமும், சம்பிரதாயமும் இணைந்து வருகின்றன. தாலி கட்டுவதும், அம்மி மிதித்து அருந்ததி பார்த்தலும் சம்பிரதாயமாக வருபவை. ஆனால் திருமணம் என்பது எப்படி நடத்தப்பட்டால் முழுமை அடையும் என வேதம் கூறுகிறது. எனவே திருமண காலத்தில் ஓதப்படும் மந்திரங்களில் இவை இரண்டும் கலந்து வருகின்றன. இவற்றை நாம் உணராமல் 'எதற்கு இப்பொழுதும்கூட இந்திரன், சந்திரனைக் கூப்பிடுவது அர்த்தமில்லாமல்' என்று அனைத்தையும் முழுமையாக ஒதுக்கி விடுகிறோம்.

## பிறப்பு முதல் இறப்பு வரை...

இந்து மதத்தில் மனிதன் பிறந்ததிலிருந்து இறக்கும்வரை எப்படி எப்படியெல்லாம் வாழ வேண்டும் என்று விதிமுறைகளையே வகுத்து வைத்திருக்கிறார்கள். இன்னும் சொல்லப் போனால், மனிதன் கருவாக உயிர்ப்பதிலிருந்தே தொடங்கிவிடுகின்றது. இந்தச்சம்பிரதாயங்களில் 42 வகைகள் உள்ளன. (ஜாதகர்ம நாமகர்ண அன்னப்ராஸன சௌளோபநயன விவாஹ....)

இவைகள் மனிதனை மனிதனாக மாற்ற உதவுகிறது. அர்த்தமுள்ள சம்பிரதாயங்களைப் படிப்படியாகக் கடைப்பிடிப்பதன் மூலம் அந்த மனிதனும் படிப்படியாக உயருகிறான். திருமணம் முடிந்து செய்யப்படும் சாந்திமுகூர்த்த வைபவத்தை 'கர்ப்பாதானம்' என்பர். அப்பொழுது சொல்லப்படும் மந்திரமே,

''நாம் வலிவுள்ள நல்ல குழந்தைகளைப் பெறுவோம். அவன் குணவானாகவும், நல்ல பழக்க வழக்கங்கள் உடையவனாகவும் விளங்கட்டும். அவனுடைய பிறப்பின் மூலம் என்னுடைய மூதாதையர்களை மோட்சம் பெறச் செய்யட்டும். அத்தகைய பிள்ளையைப் பெறக் கடவுள் உனக்கு அருள் செய்யட்டும்.''

என்ற பொருளை உடையதுதான். சுயநலத்தில் ஏற்படுவதே சிற்றின்பம். அந்தச் சுயநலத்திலிருந்தே பரநலத்தைப் பேணுகிறது இந்து மதம். நல்ல குணமும், அறிவும் உள்ள குழந்தைகளால்தான் நல்ல சமுதாயம் உருவாக முடியும். எனவே நற்குழந்தை உண்டாக வேண்டும் என்று வேண்டியே இருவரும் இணைகின்றனர்.

எனவே இதிலிருந்தே, தொடங்கிவிடுகிறது மனிதனுடைய கடமைகள். பிறக்கப் போகும் குழந்தைக்கே கடமைகளைப் போதித்து விடுகின்றனர் நமது சாஸ்திர வல்லுநர்கள்.



## திருமணம் ஆயிரம் காலத்துப் பயிர்!

ஒவ்வொரு மனிதனின் வாழ்விலும் (பெரும்பாலோருக்கு) ஒரே முறை வருவது திருமணம். எனவே மிக முக்கியமான இந்த நிகழ்ச்சியிலே வேதமும், சம்பிரதாயமும் இணைந்து, முக்கியமான இடத்தைப் பெறுகின்றன.

திருமணத்தில் 18 சடங்குகளைக் கடைப்பிடிக்கின்றனர்.

(1) கணபதி பூஜை: பொதுவாக எந்தச் செயலைச் செய்தாலும் தடங்கல் இல்லாமல் நடைபெற வேண்டுமே என்று நினைப்போம். அதற்கு விக்னம் தீர்க்கும் விநாயகனை வணங்குவது வழக்கம். அதையே திருமணத்திலும் கடைப்பிடிக்கிறோம்.

(2) நாந்தி தேவதா பூஜை: உடலில் உள்ள ஆன்மாவுக்குப் பல தேவதைகளை அதிபதிகளாகக் கூறுவர். இவர்களை நாந்தி தேவதைகள் என்பர். சூக்ஷ்ம உடலுடன் பெரிதும் சம்பந்தப்பட்டதால் கணபதிக்கு அடுத்தபடியாகநாந்திதேவதைகளுக்குப்பூஜை

3. நவக்கிரக பூஜை: சாஸ்திரங்களே அல்லாமல் பூகோள சாஸ்திரமும்கூட கிரகங்கள் மனிதனை ஆட்சி செய்வதை ஒப்புக்கொள்கின்றன. நவக் கிரகங்களுக்குப் பூஜை செய்து அவர்களைத் திருப்தி செய்கின்றனர்.

4. ஸ்னாதகச் சடங்கு: குருகுல வாசத்தில் கல்வி பயின்று முழுமையடைந்து வயது வந்த இளைஞன் விடைபெறும் நிகழ்ச்சி. தான் பிரம்மச்சாரியாக இருந்து கல்வி பயின்ற காலத்தில் ஏதேனும் தவறு செய்திருந்தால் மன்னிக்கும்படி வேண்டுகிறான்.



யும். அவற்றுள் ஒன்றுதான் இந்த அம்மி மிதித்து, அருந்ததி பார்த்தல்.

'பழக்கமில்லாத வீடு. புது முகங்கள். எதிர்பாராத எதிர்ப்புக்கள். உன் பொறுமையைச் சோதிக்கலாம். இன்பத்துக்கு இடையூறுகலாம். ஆனால் நீ மிதித்து நிற்கும் இந்த அம்மிக்கல்உறுதியானது. அசையாதது. அதுபோல நீயும் இருத்தல் வேண்டும்.'

என்று கணவனால் முன்கூட்டி அன்புடன் எச்சரிக்கப்படுகிறாள். ஏனெனில் அவன்தான் எந்த நிலையிலும் உன்னைக் கைவிட மாட்டேன் என்று உறுதிமொழி அளித்திருக்கிறானே!

'இரவின் இருளிலும் ஒளி தந்து வழி காட்டுவது அருந்ததி. அதுபோல எந்த விதத் துன்பத்திலும் எனக்கு நீ ஒளியாகத் திகழ வேண்டும்' என்று கேட்டுக் கொள்கிறான் கணவன்.

'துருவன் நினைத்த லட்சியத்தை அடையத் தவம் மேற்கொண்டான். மாற்றாந்தாய் நீ தவம் செய்தால்தான் தந்தையின் மடியில் இடம் பெற முடியும் என்றாளாம். அந்தச் சிறுவன் புறப்பட்டு விட்டான், காடு நோக்கி. தவமே கடமையாகி, அதுவே மூச்சாகி அசையாத தன்மையை உலகுக்கே உணர்த்தி விட்டான். அவன் போல நீங்களும் கருமமே கண்ணாகி, ஸ்திரத் தன்மையுடன் வாழ்க்



கைப் படகைச் செலுத்த வேண்டும்.' என்று கணவனுக்குத் துருவனைக் காட்டி இங்கிதமாக அறிவுறுத்துகிறாள் மனைவி.

## பிரதான ஹோமம்

ஒரு பெண் பிறந்தவுடன் அவளைசோமன், கந்தர்வன், அக்னி என்ற மூவரும் காப்பதாகவும், ஏழாண்டுகள் முடிந்தே அவளை மனிதர்களிடம் ஒப்படைப்பதாகவும்கூறுவர்.



மணத்தையே சட்டப்படி நடந்த திருமணமாக ஏற்றுக் கொள்கிறது.

இல்லறத்தின் முக்கியமான கடமை உணவு படைத்தல். எனவே அதற்கு வேண்டிய செல்வச் செழிப்பை விஷ்ணு உனக்கு அளிக்கட்டும். (ஏகம் இஷே விஷ்ணு ஸத்வான் வேது) என்று கூறி, மணமகளின் முதலடியை எடுத்து வைக்கிறான் மணமகன். இவ்வாறே, பலம், குடும்பப் பாதுகாப்பு, சுகம், பசுக்கள், மாறி வரும் ஆறு பருவங்களுக்கேற்ப வீடு உணவு வகைகளைக் காத்தல், தாம்பத்ய நட்பு என மேலும் ஆறடி எடுத்துக் கொடுக்கிறான் மணமகன்.

இதோ, இருவரும் ஏழடி நடந்து விட்டார்கள். இவர்களின் நட்பு உறுதியாகி, வாழ்க்கையிலும் பிணைந்து விட்டார்கள். இந்த ஏழு அடிகளிலும் இவர்களுக்குச் சொல்லப்படும் உவமைகளும் அர்த்தம் நிறைந்தவை.

முதலில் நீ பூமி நான் ஆகாசம் என்று இடைவெளி அதிகமாக உள்ள பொருளை உவமிக்கிறான். பிறகு, விதை, வயல் என நெருங்கி வருகிறான். மனமும் வாக்கும் போல, ஸாம வேதமும், அதர்வண வேதமும் போல என்று இரண்டறக் கலந்து விடுகிறார்கள். நீ இன்றி நான் வாழ இயலாது என்று ஏழாவது அடியில் அருமையுடன் கூறி அவளைத் தன் வாழ்க்கைத் துணைவியாக்கிக் கொள்கிறான் மணமகன்.

## அம்மி மிதித்து, அருந்ததி பார்த்து...

இவையெல்லாம் சம்பிரதாயமாக வந்தவையே. பல்வேறு நிலைகளில் இல்லறத்தின் கஷ்ட சுகங்களைக் கணவன் மனைவிக்கு உருவகப்படுத்திக் காண்பிக்கிறான்.

இன்றைய மனோ தத்துவ நிபுணர்கள் அக்காலத்திய நடைமுறைச் சம்பிரதாயங்களை மகிழ்ச்சியுடன் வரவேற்கிறார்கள். திருமண நாள் என்றாலே வெறும் கேலி, கிண்டல், களியாட்டம், இன்பம் என்பது மட்டும்தான் என்றாகி விட்டது. திருமணம் நிச்சயித்த நாளிலிருந்து பெண்ணும் பிள்ளையும் கேலிக்கு ஆளாக்கப்படுகிறார்கள். பிறந்த வீட்டின் ராணியாகத் திகழும் மணப் பெண்ணுக்குப் புகுந்த வீட்டில் ஏற்படும் பிரச்னைகளைப் பற்றி யதார்த்தமாக யாரும் பேசுவதில்லை. ஒன்று, அதிகமாகப் பயமுறுத்தி வைப்பார்கள் இல்லையென்றால் மணமகனை அவளுடன் இணைத்துப் பேசுவார்கள்.

ஆனால் நம்முடைய திருமணச் சம்பிரதாயங்களைப் பார்க்கும்போது மனோதத்துவ ரீதியாகப் பாங்குடன் அமைந்திருப்பது புரி



இவ்வாறு குருகுல வாசம் முடிக்கும் இளைஞனே மணம் செய்து கொள்ளும் தகுதி பெறுகிறான். இங்கிருந்தே திருமணத்துக்கான பிரத்தியேக நிகழ்ச்சிகள் ஆரம்பமாகின்றன. (5) காசி யாத்திரை (6) வாக் நிச்சய முகூர்த்தம் (7) சங்கல்பம் (8) கன்யா தானம் (9) மணமகளின் உறுதிமொழி (10) கங்கண பந்தனம் (11) சப்தபதி (12) பிரதான ஆஹுதி (13) லாஜ ஹோமம் (14) புகுந்த வீடு புறப்படுதல் (15) கிரகப் பிரவேசம் (16) மூன்றிரவு பிரம்மச்சர்யம் (17) சேஷ ஹோமம் (18) கர்பாதானம்.

இவற்றை இனி விரிவாகக் காணலாம்.

ஸ்நானக் சடங்கு முடித்து குருவிடம் விடை பெற்ற மணமகன் அடுத்து இல்லற வாழ்க்கை தொடங்க வேண்டும். ஆனால் அவனாகச் சென்று 'எனக்கு உன் மகளைக் கொடு!' என்று யாரையும் கேட்க முடியாது.

அவன் முன் நிற்கும் வழிகள் இரண்டே. இல்லறம், சந்நியாசம். இல்லறத்துக்கு மனையாள் வேண்டும். அதற்குத் தானாகச் சென்று கேட்க முடியாத நிலையில் சந்நியாசம்தான் அவனுக்கு இருக்கும் ஒரே வழி. எனவே 'உலக ஞானம் பெற்றுத் திரும்புகிறேன்' என்று குருவிடம் விடை பெற்றுப் புறப்படுகிறான். இதுவே 'காசி யாத்திரை' என்பது.

இன்றைய நடைமுறை வாழ்க்கையும் இதிலிருந்து மிகவும் மாறுபட்டு விடவில்லை. அன்றைக்கு ஐந்து வயதில் அட்சராப்பியாசம் நடந்தால் இன்று இரண்டரை வயதில் கிண்டர் கார்டன் செல்கிறார்கள். படித்துப் பட்டம் பெற்ற பின் பொருள் வருவாய்க்கு வேலையைத் தேடுகிறார்கள். இந்தக் காலத்தில் Communication gap மிகவும் குறைச்சல். வீட்டுக்குள்ளிருந்தே உலகத்தைப் பார்க்க முடியும். அதனால் தகுதி பெற்ற மணமகனை உடனே பெண்ணின் பெற்றோர் தேடி வந்து விடுகின்றனர். அந்தக் காலத்தில் அவன் காசி யாத்திரை புறப்பட்ட பிறகே அவன் தகுதியுள்ள வரன் என்று பெண்ணின் பெற்றோர் புரிந்து கொள்கின்றனர்.

'இவன் முழுமையான கல்வித் தகுதி பெற்று விட்டான்; காசி வரை செல்லவும் துணிந்து விட்டானென்றால் (வண்டி வசதிகள் ஏதுமற்ற அந்தக் காலத்தில் காசிக்குப் போவது என்பது மறு பிறப்பு எடுப்பது போல) இவன் கண்டிப்பாக மன வலிமையும், உடல்வலிமையும்உடையவனே. எனவே இவன் நம் பெண்ணைக் கண் கலங்காமல் காப்பான்' என அந்தப் பையனுக்குச் சமமான பெண்ணின் தந்தை நிச்சயிக்கிறார்.

திருமணத்துக்கு முன் நிச்சயதார்த்தம்

செய்யப்படுகிறது. இந்தப் பெண்ணை இந்த வரனுக்குத் தருகிறேனென்று அனைவரையும் ஒன்று கூட்டிக் கூறுகின்றனர். இங்கு சில முக்கியமான – நடைமுறை வாழ்க்கையோடு ஒத்துப் போகக் கூடிய சம்பிரதாயங்கள் உள்ளன.

உற்றார், உறவினர் அனைவரின் முன்னிலையில் பெண்ணின் தந்தை, தந்தை வழிப் பாட்டனார், முப்பாட்டனார் இவர்களுடைய பெயரைக் கூறி இந்த வம்சத்தில் வந்த பெண்ணை இந்த வரனுக்குத் தருகிறேன் என்கின்றனர். இதே போல் மணமகனின் மூன்று தலைமுறையினரின் பெயரைக் கூறி அவர்களுடைய மகன் என்று கூறுகின்றனர். இவர்கள்இருவருக்கும் நிச்சயிக்கப்படும் இந்த திருமணத்தில் எவருக்கேனும் ஆட்சேபனை உண்டா என மூன்று முறை கேட்கப்படுகிறது.

இதை ஒருவித 'ஐடின்டிபிகேஷன்' எனலாம், ஏனெனில் மணமகன் பெயரும், மணமகள் பெயரும் யாருக்கும் இருக்கலாம். எனவே ஒருவருடைய பெயரை வைத்து மட்டும் நிச்சயித்து விட முடியாது. மூன்று தலைமுறையினரின் பெயரும் மற்றொருவருக்குப் பொருந்தாது. எனவே 'சாட்சி'களாகப் பலரை வைத்துக் கொண்டு இந்த வம்சாவழி கூறி நிச்சயிக்கப்படுவதால் ஆள் மாறாட்டம் நடைபெற வாய்ப்பே இல்லை. இது ஒரு Fool proof System ஆகிவிடுகிறது.

## அட்சதையும், அக்னி வளர்த்தலும்

திருமணம் நிச்சயமான பிறகு இன்றைய நிலையில் அழைப்பிதழ்கள் அச்சிட்டுப் பலருக்குத் தபாலிலும், சிலரை நேரிலும் அழைக்கிறோம். அவ்வாறு நேரில் அழைக்கும்போது 'அட்சதை' தந்து அழைத்தல் என்பது இன்றும் ஒருசிலரிடம் வழக்கமாக உள்ளது. இதை மங்கலத்துக்கு அடையாளமாகக் கருதுவர்.

'அக்ஷதை' என்றால் பாதிப்பு அற்றது – முழுமையானது என்று பொருள். மனிதனின் பிறப்பிலிருந்து இறப்பு வரை அவனுக்கு இன்றியமையாத தேவை உணவு. அந்த உணவுக்கு நம் நாட்டைப் பொறுத்த வரை அடிப்படை ஆதாரமாக இருப்பது அரிசி. எனவே அந்த அரிசியினை மங்கலமாக மஞ்சளுடன் கலந்து அழைக்கும்போது, 'உங்களுக்குச் சிறப்பான விருந்தோம்பலும் உண்டு' என்று மறைமுகமாகக் கூறி வரவேற்கிறார்கள். நயத்தக்க நாகரிகமான இந்தப் பண்பாட்டிலேயே இந்த அழைப்பு முழுமையடைகிறது.

அதே போல அக்னி வளர்த்தல்–ஹோமம் செய்தல் – என்னும் சடங்கும்அருமையான





தில் இந்தச்'சட்டப்படி பிறக்காத குழந்தை'களுக்கு உரிமையுண்டு. அங்கும் இரண்டாவது மனைவிக்கு எந்தவிதப் பாத்யதையும் கிடையாது. திருமணம் செய்துகொண்ட ஒவ்வொரு ஆணும் பெண்ணும் அவர்களுடைய மனைவியை அல்லது கணவனை விவாகரத்துச் செய்த பின்போ அல்லது இறந்த பின்போதான் இரண்டாவது திருமணம் செய்துகொள்ளமுடியும்.

சாதாரணமாகச் செய்யப்படும் திருமணங்களையும் பதிவு செய்யலாம். பதிவுத் திருமணங்களும் செல்லும்.

இனி திருமணத்துக்குத் திரும்புவோம். சாஸ்திரம், சம்பிரதாயம், இந்து திருமணச் சட்டம் அனைத்தும் அருமையாக இணையும் இடம் 'சப்தபதி'.

## சப்தபதி

ஒருவனுடன் ஏழடி நடந்து விட்டால் அவன் நண்பனாகி விடுகிறான். அதனால்தான் அக்காலத்தில் அரசர்கள் தங்களைச் சந்திக்க வரும் பெரியவர்களுடன் ஏழடி நடந்து, மரியாதை செய்து வழியனுப்பி வைத்தார்கள்.

இவ்வளவு சிறப்பு வாய்ந்த ஏழடி நடத்தலைத் திருமணத்திலும் சப்தபதி என்று குறிக்கிறார்கள்.

திருமணச் சட்டம் சப்தபதி நடந்த திரு

எனவே மூன்று தலைமுறையினர், அவர்களுடைய வரலாறு இவையெல்லாம் ஒருவருக்கொருவர் தெரியும். போதாதற்கு அர்த்தேச, காமேச, மோக்ஷேச நாதி சராமி என்று மணமகனும் வாக்குறுதி தந்து விடுகிறான். உற்றார் உறவினர் முன்னிலையில் எந்த வித ரகசியங்களும் இல்லாமல் பிணைக்கப்படுகிறார்கள்.

1956ல் இயற்றப்பட்ட இந்து திருமணச் சட்டமும் இதைத்தான் வலியுறுத்துகிறது. இதில் ஒரு வேடிக்கை என்னவென்றால் இந்து மதத்தைக் கடைப்பிடிக்க வேண்டுமென்று இல்லை, அவன் நாத்திகனாக இருந்தாலும் ஆத்திகனாக இருந்தாலும் மதத்திலேயே நம்பிக்கையே இல்லாதவனாக இருந்தாலும் சட்டம் ஒருவன் இந்துவாக இருந்தால்அவனைக்கட்டுப்படுத்துகிறது.இதற்கென்று சில நிபந்தனைகளையும் விதிக்கிறது.

(1) திருமணம் செய்துகொள்ளும் மணமகனும், மணமகளும் இதற்கு முன் திருமணமாகி கணவனோ அல்லது மனைவியோ உயிருடன் இருக்கக் கூடாது.

(2) இருவரும் சுயஅறிவுடையவர்களாக இருத்தல் வேண்டும்.

(3) புத்தி சுவாதீனம் இல்லாதவர்களாக, காக்கா வலிப்பு போன்று வாழ்நாள் முழுவதும் தொடரும் தீராத வியாதி உள்ளவர்களாக இருத்தல் கூடாது.

(4) மணமகனுக்கு 21 வயதும், மணமகளுக்கு 18 வயதும் நிரம்பியிருத்தல் வேண்டும்.

இந்த வயது என்னும் ஒன்றைத் தவிர மற்றவை அனைத்தையும் அந்தக் காலச் சட்டமாகிய வேதமே பல்வேறு வகைகளில் பூர்த்தி செய்து விடுகிறது.

இந்து திருமணச் சட்டத்தில் மற்றொரு முக்கியமான, அனைவரும் அறிய வேண்டிய உண்மை ஒன்று உண்டு. பொதுவாகக் கதைகளிலும் சினிமாக்களிலும் முதல் மனைவி கையெழுத்துப்போட்டுக்கொடுத்துவிட்டால் கணவன் செய்து கொள்ளும் இரண்டாவது திருமணம் சட்டப்படி செல்லுபடியாகும் என்பதே. இதைச் சட்டம் ஒருபோதும் அனுமதிப்பதில்லை.

முதல் மனைவி மண முறிவின்றி (விவாகரத்து) உயிரோடு இருக்கும் வரை இரண்டாவது திருமணம் சட்டப்படி செல்லாது. அவர்களுக்குப் பிறக்கும் குழந்தைகளை illlegal child என்றுதான் கூறுவார்கள்.இவர்களுக்குப் பரம்பரைச் சொத்தும் வருவதில்லை. ஆனால் பெரியவர்கள் செய்த தவற்றிற்குக் குழந்தைகளை ஆளாக்கக் கூடாது என்பதற்காக தந்தையின் சுயார்ஜிதச் சொத்



அர்த்தம் உடையது. பச்சையான காய் கறிகளை, மாமிசங்களை உண்டு வளர்ந்த கற்கால மனிதனின் முதல் கண்டுபிடிப்பு நெருப்பு (அக்னி). இதிலிருந்தே அவனுடைய நாகரிகமும் வளரத் தொடங்கியது. அந்தக் கற்காலம் முதல் இன்றுவரை அவனுக்குக் கைகொடுத்து உதவி உணவிலிருந்து அனைத்துக்கும் ஆதாரமாக நிற்பது அக்கினியே. எனவே ஒவ்வொருவரின் வாழ்வோடும் கலந்துவிட்ட அக்கினியையும் சாட்சியாக அமைத்துக் கொள்கிறான்.

அக்கினியும் கூட நன்றாக விளங்கித் தோன்றும்போதுதான்(அதாவது அவன் கண் திறந்து பார்ப்பதாக அர்த்தம்) சாட்சியாகிறது. எனவேதான் நறுமணம் மிக்க நெய்யை விட்டு நன்கு எழச் செய்கின்றனர். அப்படிப்பட்ட அக்கினி சாட்சியாக நடக்கும் திருமணமே அர்த்தமுள்ளதாகிறது.

## கன்யாதானம்

'தானத்துள் சிறந்தது கன்யா தானம். இப்படிப்பட்ட தானத்தை வழங்கும் தந்தை 21 தலைமுறைகளுக்கு முக்தியளிக்கிறான்' என்றெல்லாம் கூறுவார்கள். அவையெல்லாம் இன்றைய வாழ்க்கையில் விமரிசிக்கப்பட வேண்டியவை. ஆனால் ஒருவகையில் இன்றைய இளம் பெண்கள் திருப்திப்பட்டுக் கொள்ளக் கூடிய அம்சம் இருக்கிறது. தானம் என்பது உயர்ந்தவர், பெற்றுக்கொள்ளக் கூடியவருக்குக் கொடுப்பது. அப்படியே பெண்ணைப் பெற்றவர்,

இமாம் கன்யாம் பிரதாஸ்யாமி பித்ருணாம்
தாரணாயவை:
கன்யாஞ் சாலங் க்ருதாம் சாத்வீம்
சுசீலாய
சுதீமதே ப்ரயதோஹம் ப்ரயச்சாமி
தர்ம காமார்த்த சித்தயே'

எனக் கன்யாதானம் செய்விக்கிறார். (கன்னிகை, என்னால் முடிந்த ஆபரணங்களைப் பூட்டி அலங்கரிக்கப்பட்டவள், சாத்வீகமான குணமுடையவள், சீலமான பண்புடையவள், மிகுந்த புத்திசாலி, இப்படிப்பட்டவளை உன்னுடையதர்மம், பொருள், காமம் காக்க வேண்டித் தருகிறேன்.)

இப்படிக் கன்யாதானம் பெற்றுக் கொண்ட மணமகனிடம் மூன்று முறை வாக்குறுதியை வாங்கிக் கொள்கிறார் பெண்ணின்தந்தை. அர்த்தேச:காமேச:மோக்ஷேச: நாதிதி சரிதவ்யம்: என்று ஒவ்வொன்றும் சொல்லும்போதும் மணமகன் நாதி சராமி: நாதி சராமி: நாதி சராமி: என்கிறான்.

வாழ்வின் இருப்பு முனையான திருமணத்துக்கப்புறம் அந்தப் பெண் இவன் மனைவி

யாகி இறப்பு வரை அவனுடனே வருகிறாள். அவனுடைய இன்பத்துக்கும் துன்பத்துக்கும் உறுதுணையாகிறாள். எனவே இந்த வாழ்க்கையிலும் காமத்திலும் இறந்த பின் மோக்ஷத்திலும் கூட அவளைக் கைவிடமாட்டேன் என்று மணமகன் செய்யும் சத்தியமே அது.

இந்த மந்திரங்கள் வெறும் வார்த்தைகளல்ல. அதன் அர்த்தத்தை ஒவ்வொரு மணமகனும்புரிந்து நடந்துகொள்வானேயானால் இன்றைக்கு நடக்கும் எத்தனையோ அசம்பாவிதங்கள் தடுக்கப்படும்.

## பாணிக்ரஹணம்

ஆணும் பெண்ணும் சமமான நிலையில் இருப்பதையே பாணிக்கிரஹணம் (கைப்பிடித்தல்) தெரிவிக்கிறது. மேலை நாட்டிலும் கூடச் சமமானவர்களுடன் கைகுலுக்கும் பழக்கம் இருக்கிறது.

'க்ருப்ணாமி தே· ஸௌப்ர ஜாஸ்த்வாய ஹஸ்தம்...'

என்று சிறப்பிக்கிறது வேதம். இந்தக் கன்யாதானம், பாணிக்கிரஹணம் இவற்றை வேதமே குறிப்பிடுகிறது.

'பாணிக்கிரஹணம் செய்வதாய் நிச்சயித்து...' என்று அழைப்பிதழில் போடுகிறோமே தவிர, 'மாங்கல்ய தாரணம் செய்விப்பதாய் நிச்சயித்து' என்று போடுவதில்லை.



'கைத்தலம் பற்றக்
கனாக் கண்டேன் தோழி நான்...

என்கிறாள் ஆண்டாளும். தகுதி வாய்ந்த மணமகனும் மணமகளும் 'கரம் பற்றி' வாழ்க்கையில் நுழைகின்றனர்.

## மாங்கல்யதாரணம்

திருமணத்தில் திருமாங்கல்யம் கட்டுவதைப் பற்றி வேதம் – அதாவது அந்தக் காலச் சட்டம் – எதையும் கூறவில்லை. ஆனால்



நடைமுறைச் சம்பிரதாயங்களில் இருந்திருக்கிறது.

'திருமண காலத்தில் ஈசுவரனால் கழுத்தில் கட்டப்பட்ட பல நூல்களின் பிரதிநிதிகளாக உள்ள ரேகைகள்...'

என்று ஆதி சங்கரரே லலிதா சஹஸ்ர நாமத்தில் அம்பிகை மாங்கல்யம் அணிந்ததைக் கூறுகிறார். தமிழ் இலக்கியத்திலும் கூட இது போல சர்ச்சைகள் உண்டு. மாங்கல்யம் அணிவது தமிழருக்கு வழக்கமல்ல என்பார்கள். இளங்கோ, மங்கல நூலன்றி வேறொன்றும் அணியாத கண்ணகி–

என்கிறார். அதில் சொல்லப்படும் மங்கல நூல் தாலியல்ல என்பார்கள் சிலர். ஆனாலும் நடைமுறைச் சம்பிரதாயத்தில் தாலி அணிதல் உள்ளது. சீர்திருத்தத் திருமணத்தில் கூடத் தாலியைக் கட்டுகின்றனர்.

'மாங்கல்யம் தந்துனானேன மமஜீவன ஹேதுனா கண்டே பத்னாமி சுபகே த்வம் ஜீவ சரதச்சதம்'

(எனது வாழ்வுக்குக் காரணமான மங்கல நூலை உனது கழுத்தில் அணிவிக்கிறேன். நீயும் என்னுடன் நூறாண்டு வாழ வேண்டும்)

என்று எல்லோரும் அறிந்த மந்திரம் இப்பொழுது சொல்லப்படுவதே. பொதுவாக இதோடு கல்யாணம் முடிந்து விடுவதாகவும் இதற்கப்புறம் நடைபெறும் அனைத்துமே வெறும் சடங்குகள்தான் என்றே பலரும் நினைக்கின்றனர். ஆனால் வேதப்படியோ, இன்றைய சட்டப்படியோ கூடத் திருமணம் தாலி கட்டினால் மட்டும் செல்லுபடியாகிவிடாது.

## சட்டம் என்ன சொல்கிறது?

மாங்கல்யம் கட்டிவிட்டால் மட்டுமே திருமணம் முடிந்துவிடவில்லை. ஏனென்று சட்டத்தைக் கொஞ்சம் பார்ப்போம். இது பெரியோர்களால் நிச்சயித்த திருமணம்,

# கார்டூனிஸ்டுகள் பார்வையில் சுதந்திரம்!









# எழுத்தாளர் வீட்டில் ஒரு கதை

அய்க்கண்

சென்னைக்கு அலுவலகவேலையாகச்சென்றிருந்தபோது ஒரு நாள் ஓய்வு கிடைத்தது. அன்று என் அபிமான எழுத்தாளர் சாரதாவைச் சந்தித்துப் பேசிவிட்டு வரலாமே என்ற நினைவு தோன்றியது. உடனே புறப்பட்டு விட்டேன்.

சாரதாவின் எழுத்துக்களில் எனக்கு அபரிமிதமான காதல். அவருடைய கதைகளை ஒன்றுவிடாமல் படித்திருக்கிறேன்.

பல பாராட்டுக் கடிதங்களை அவருக்கு நேரடியாக எழுதி, அவரும் எனக்குப் பதில் எழுதியிருக்கிறார். நாங்கள் இருவரும் நேரில்



சந்தித்துக் கொண்டதில்லையே தவிர, இருவருக்கும் கடிதத் தொடர்பு அடிக்கடியும் பெர்ஸனலாகவும் கூட இருந்து வருகிறது.

நல்ல வேளை, இப்போது என்னை ஒரு முக்கிய வேலையாகச் சென்னையில் உள்ள தலைமை அலுவலகத்துக்கு அனுப்பி வைத்தார் புண்ணியவான் எங்கள் பிராஞ்சுமானேஜர்.

வந்த வேலையைச் சட்டுப் புட்டென்று முடித்துக் கொண்டு விட்டேன்.

சாரதாவின் விலாசம்தான் எனக்கு மனப்பாடம் ஆயிற்றே!

இரண்டு பஸ்கள் மாறி, ஒரு மூலையில் இருக்கஅந்தச் சின்னத் தெருவைக் கண்டு பிடித்து விட்டேன்.

''எழுத்தாளர் சாரதா வீடு இந்தத் தெருவில்தானே இருக்கிறது?'' என்று அந்தத் தெருவில் நுழைந்ததும் விசாரித்தேன்.

''சாரதாவா?... சாரதானு ஒரு பொம்பளை எழுத்தாளர் இங்கே இல்லையே!'' என்று கையை விரித்தார், எதிரே வந்த ஒரு நடுத்தர வயதுக்காரர்.

அவர் தமிழ்ப் பத்திரிகைகளே படித்திருக்க மாட்டார் போலிருக்கிறது!

''சாரதாங்கிறது பொம்பளை இல்லிங்க. சாத்தூர் ரங்கநாதனுடைய மகன் தாமோதரன்னு ஒருத்தர் பத்திரிகை ஆபீஸிலே வேலை பார்க்கிறவர்...''என்று விளக்கமாகச் சொன்னேன்.

''ஓ!... அந்த சாத்தூர்ப் பையன் தாமோதரனு?... இங்கேதான் ஏழாம் நம்பர்லே இருக்கான்... வீட்டிலே புருஷன் பொண்சாதி ரெண்டு பேர்தான். பலவேறு பிக்கல் பிடுங்கல் கிடையாது. அதுதான் கதையெல்லாம் எழுதறான் போலிருக்கு'' என்று சொல்லிக் கொண்டே அந்த வீட்டை நோக்கி விரலை நீட்டிக் காட்டிவிட்டு, தம் வேலையைப் பார்க்கப் புறப்பட்டார் அவர்.

ஏழாம் எண் வீட்டுக்கு வந்து காலிங் பெல்லை அழுத்து முன்னர் உள்ளே, ஒரு பெண் குரல் உரக்கக் கேட்டது:

''என்னங்க, உங்களை நல்லா ஏமாத்திட்டான் அந்தக் கடைக்காரன். நம்ம தெருவிலே இருக்காரே, போஸ்டாபீஸில் வேலை பார்க்கிற குருசாமி, அவர் இதே மாதிரி அலமாரியை எண்ணூத்தி நாற்பது ரூபாய்க்குத்தான் வாங்கி வந்திருக்கார்; உங்க



தலையிலே எண்ணூத்தித் தொண்ணூறு ரூபாய்க்கு வச்சிக் கட்டிட்டான் — ஐம்பது ரூபாய் அநியாயமாய் நஷ்டம்.'' இவள் தான் சாரதாவின் மனைவி வனஜாவோ? திகைத்து நின்று கொண்டிருந்தேன் நான்.

''வனஜா.... இதுக்கு ஏன் இப்படி அலர்றே? ஐம்பது ரூபாய்தானே?... பாவம், அந்தக் கடைக்காரன் பிழைச்சுட்டுப் போகி றான் போ!''

—இது எழுத்தாளர் சாரதாவாகத்தான் இருக்க வேண்டும் என்று யூகித்து முடிவு செய்தேன்.

''இப்படியே உங்க பேரைச் சொல்லி, ஊரிலே இருக்கிறவனெல்லாம் பிழைச்சுக் கிடுவாங்க. நாம்தான் ஏமாளியாய் நிற்கப் போகிறோம்... என்னமோ, பத்திரிகையிலே கதைகள் மட்டும் எழுதத் தெரியுது! ஒரு சாமான் வாங்கத் துப்பில்லே...

ஓர் அருமையான எழுத்தாளருடைய அறி வைப் பற்றி எவ்வளவு மட்டமாகச் சொல் கிறாள் அவருடைய மனைவி!

அவருடைய கதைகளின் அறிவுபூர்வ மான கருத்துக்களையும் அபூர்வமான விஷ யங்களையும் எத்தனையோ பேர் பாராட்டிப் புகழ்கிறார்களே?...

''வனஜா! அவங்க எல்லாம் சாமான் வாங்கறதிலே கெட்டிக்காரங்கதான்; ஆனால் அவங்களை ஒருகதை எழுதச் சொல்லு பார்க் கலாம்!'' என்று சவால் விட்டார் சாரதா.

அவர் போட்ட துருப்புச் சீட்டில் வனஜா இக்குமுக்காடப் போகிறாள் என்று மகிழ்ச்சி யடைந்தேன்.

---

விடை:

அன்பே வா
ஆயிரம் ஜென்மங்கள்
இதயக் கமலம்
சுநாடு
உலகம் சுற்றும் வாலிபன்
உழைக்கு உழைப்பவன்
எல்லோரும் நம்மவரே
ஏணிப்படிகள்
ஐந்து லட்சம்
ஒரு ஊதாப்பூ கண்சிமிட்டுகிறது
ஓ....மஞ்சு....
ஔவையார்

—பெம்ஜி



''கதையா? கதை எழுதறது என்னங்க பிரமாதம்? காகிதத்தையும் பேனாவையும் கொடுத்தா, கழுதை கூடக் கதை எழு துங்க... கிராமத்திலே எங்க பாட்டி சொல் றதை யெல்லாம் எழுதிட்டான்னு அவனை விடப் பெரிய எழுத்தாளர் வேறு யார் இருக்கா?'' என்று படாரென செவுளில் அடித்தது போல் — வார்த்தையால்தான் வந்த வனஜாவின் பதில் வெளியே நின்ற என்னையும் தூக்கி வாரிப் போட்டு மிதித்து விட்டது.

''வனஜா! இங்கே வாயேன்...'' என்று சாரதா அழைத்ததும், முகத்தைத் துடைத்த வாறே அடுக்களையிலிருந்து வந்தாள், வனஜா. ''இவர்தான் மிஸ்டர் கண்ணன், திருப்பத்தூரிலிருந்து வந்திருக்கிறார். என் ரசிகர். அடிக்கடி கடிதம் எழுதுவார். இப் போதான் நேரடியாகப் பார்க்க வந்திருக் கிறார். ஆபீஸ் வேலையாக மெட்ராஸ் வந் தாராம். அப்படியே என்னையும் பார்த்து விட்டுப் போகலாம்னு வந்திருக்கிறார்:...

''வணக்கம்'' என்று என்னைப் பார்த்துச் சொல்லும்போது, 'சரிதான், இவனும் கதை, கதைன்னு அலைகிற ஒரு உதவாக்கரை போலிருக்கு' என்கிற மாதிரி பாவம், அவ ளுடைய கண்களில் எனக்குத் தென்பட்டது.

''இவருக்குக் காப்பி கொண்டு வா, வனஜா!'' என்று தாமோதரன் கட்டளை இட்டதும் உள்ளே சென்றாள் மனைவி.

சிறிது நேரத்தில் ஒரு எவர்சில்வர் தட்டில் ஸ்பூனால் மூன்று தடவை தட்டும் சப்தம் கேட்டது.

அது ஒரு ரகசிய சிக்னல் போலிருக்கிறது!

''எக்ஸ்யூஸ் மி... இதோ வந்திடறேன்'' என்று அவசரமாக எழுந்து உள்ளே சென்றார் சாரதா.

''என்னங்க இது. என்ன காப்பிப் பொடின்னு வாங்கி வந்திருக்கீங்க. வெறும் கரிசல் மண் மாதிரி இருக்கு... இதிலே காப்பி போட்டால் கழுநீர்த் தண்ணி மாதிரிதான் இருக்கும். இப்படி ஒரு மட்டமான தூளை யாராவது வாங்கிண்டு வருவாங்களா?'' என்று குரலை இறக்கி வனஜா திட்டுவது, என் காதுகளில் தெளிவாக விழுந்தது.

ஒரு புகழ் பெற்ற எழுத்தாளருக்கு வீட் டிலே மனைவியிடம் கிடைக்கும் 'மரியாதை' யைப் பார்த்த எனக்கு ஆச்சரியமாக இருந் தது. ரொம்ப கிராக்கி! விலைமதிப்பில்லாத பெண்மணி, கவிஞர் பொன்மணி வைரமுத்து அவர்கள்தான். பொன், மணி, வைரம், முத்து அவர் பெயரில் இத்தனையும் இருக் கிறதே! —கே. எம். இளங்கோ. இவ்வளவு அருமையான எழுத்தாளரைக் கணவராக அடைந்ததற்காக அந்தப் பெண் பெருமைப் படவே யில்லையே?

எங்கள் குடும்பத்தில் என் அண்ணி, என் தமையனாரைப் பற்றி எவ்வளவு பெருமை யாக நினைத்து மரியாதையுடன் நடத்து கிறார் என்பதை நினைத்துப் பார்த்தேன்.

என் அண்ணன் — பஞ்சாயத்து போர்டு குமாஸ்தாவுக்கே அவருடைய மனைவி அவ்

# வலியிலிருந்து விரைவில் நிவாரணம் பெறவே




# புதிய அனஸின்

GM-1-82 TM

## இதில் அதிக அளவில் வலி-நிவாரணி அடங்கியுள்ளது

உலகெங்கும் டாக்டர்கள் மிக் அதிகமாக சிபாரிசு செய்யும் வலி-நிவாரணி மருந்து அதிக அளவில் கொண்டது புதிய அனஸின். தலைவலி, ஜலதோஷம், ஃப்ளு, முதுகு வலி, தசைவலி, பல் வலி ஆகியவற்றிற்கு நல்ல பலனளிக்கிறது. அனஸின் மீது மட்டுமே நம்பிக்கை வையுங்கள்

**இப்போது பாதுகாப்பான புதிய உறையில்.**



சக்தி வாய்ந்த, நம்பகமான
மேனர்ஸ்
**அனஸின்***

**இந்தியாவின் புகழ்பெற்ற வலி-நிவாரணி மருந்து**

*ட்ரேட் மார்க் உரிமை பெற்று உபயோகிப்பவர்கள் : ஜெஃப்ரி மேனர்ஸ் & கம். லிட்.

உங்கள் பற்கள் பல்லாண்டு வாழ்க!

பினாகா ஃப்ளோரைட் மூலம் உங்கள் பற்களின்
ஆயுளை நீடியுங்கள்.

பினாகா ஃப்ளோரைட், மிகவும் சக்தி வாய்ந்த
ஃப்ளோரைட் கலவை கொண்டது. இது
உண்மையிலேயே பல்லின் எனாமலோடு கலந்து.
பற்களைப் பலப்படுத்துகிறது.

வாழ்நாள் முழுக்க, சொத்தை விழுவதைத்
தடுத்துப் போரிட, இதன் பராமரிப்பு
சேவை இன்றியமையாதது.

தவறாமல் பினாகா ஃப்ளோரைட்
கொண்டு பல் துலக்குங்கள். நீங்கள்
இதனை உபயோகிப்பதைப் பொறுத்து.
உங்கள் பற்களின் ஆயுள் நீடிக்கிறது.

பல்லுக்கு உறுதி
பற்சிதைவுக்கு எதிரி ...




# பினாகா ஃப்ளோரைட்

**இந்தியாவின் முதன் முதல் சக்தி வாய்ந்த ஃப்ளோரைட் பற்பசை**

ULKA-BF-1-81-TAM

வளவு மரியாதை கொடுக்கிறுளே, இங்கே ஒரு புகழ் பெற்ற எழுத்தாளருக்கு....

உன்னே அசடு வழிந்து விட்டு வெளியே முகத்தை அழுந்தத் துடைத்தபடி புன் சிரிப்புடன் வந்த தாமோதரன், தொடர்ந்து என்னுடன் பேச ஆரம்பித்தார்.

''ஸார்! ஒரு கலைஞனுக்கு ஒரு நல்ல ரசிகை மனைவியாக அமைந்தால், அவ னுக்கு அது தூண்டுகோலாக இருக்காதா?'' என்று காதைச் சுற்றி வளைத்து மூக்கைத் தொட்டேன்.

சாரதா என் கேள்வியைப் புரிந்துகொண்டு விட்டார். அவர் அபார புத்திசாலியா யிற்றே?

''மிஸ்டர் கண்ணன்! உங்க கேள்வியின் அர்த்தம் எனக்குப் புரியுது. உங்க கிட்டே உண்மையைச் சொல்றதுக்கென்ன?... என் மனைவி என் கதைகளைப் படிக்கிறதேயில்லே. ராமாயணம், பாரதக் கதைகளைப் படிப் பாளே ஒழிய, இந்தக் காலத்துக் கதைகளை அவள் தொடவே மாட்டாள்.''

''அப்படியா? உங்க கதைகளைக் கூடவா படிக்க மாட்டாங்க?''

''உங்களுக்கு நான் பெரிய எழுத்தாளரு யிருக்கலாம். ஆனல் அவளுக்கு அந்த நினைப்பு இல்லே; அவளுக்கு நான் கணவன் மட்டும்தான்!'' என்று சிரித்தார் சாரதா.

அந்தச் சிரிப்பிலே வருத்தமோ, ஏக் கமோ இருப்பதாகத் தெரியவில்லை.

ஒருவேளை, அந்தச் சூழ்நிலைக்குத் தன் னைப் பக்குவப் படுத்திக் கொண்டு விட் டாரோ என்று நினைத்தேன்.

''எக்ஸ்யூஸ் மி ஸார்! நான் இப்படிக் கேட்கிறேனேன்னு கோவிச்சுக்கிடாதீங்க. இந்தப் பொண்ணுக்குப் பதிலாக உங்க கதைகளைப் படித்து ரசித்துப் பாராட்டிப் பெருமைப்படற ஒரு ரசிகை, உங்க மனைவி யாக அமைஞ்சிருந்தா நீங்க சந்தோஷப்பட் டிருப்பீங்களா இல்லையா?''

சாரதா கலகலவென்று வாய்விட்டுச் சிரித் தார்.

''நோ... மிஸ்டர் கண்ணன்! நீங்க நினைக்கிறது தப்பு... இந்த வனஜாவை நான் உள்ளன்போடு விரும்புகிறேன். நேசிக் கிறேன். நான் கதை எழுதும்போதுதான் சாரதா. மற்ற நேரங்களில் நான் வெறும் தாமோதரன்தான். எனக்குள்ளே இருக் கிற சாரதாவை வனஜா மதிக்கவில்லே. ஆனல் இந்த முழுத் தாமோதரனை அவள் ரொம்ப நேசிக்கிறு; அன்போடு கவனிச் சுக்கிறு; உயிராகப் பாவிக்கிறு... என் கதை களைப் படிச்சுப் பாராட்டுற ரசிகைகள் ஆயிரம் பேர் இருப்பாங்க... ஆனல் என்னைப் புரிஞ்சு பராமரிக்கிறதுக்கு இந்த வனஜா ஒருத்தியாலேதான் முடியும். இதனுலே என் மனைவிங்கிற ஸ்தானத்திலே இவளைத் தவிர, வேறு எந்தப் பெண்ணையும் என்னுல நினைச்சுக்கூடப் பார்க்க முடியாது'' என்ற அவருடைய குரலிலே பெருமையும் மகிழ்ச்சி யும் நிதர்சனமாகத் தெரிந்தன.

நான் மேலே பேச முடியாமல் வாயடைத் துப் போனேன்.





## அற்புதச் சிற்றுண்டி!

● ஏர் இந்தியா மட்டும் பிதுங்கப் பிதுங்க பிரயாணிகள் நிறைந்து பறக்கிறது. மற்ற விமான கம்பெனிகள்விழித்தன. இந்தியர்கள் ஆதரித்தால் சரி; வெளி நாட்டுப் பயணி களும் ஏர் இந்தியாவை நோக்கி ஓடுவதின் காரணம்? மண்டையைச் சொறிந்து கொண் டனர், இதர ஏர் லைன்ஸ் நிர்வாகிகள்.

தங்களுடைய ஆஸனத்தின் சொகுசு, விமா னப் பணிப் பெண்ணின் அழகு, குறைந்த கட்டணம் — இப்படி எவ்வளவோ கலர் விளம் பரங்கள்! திருவிழாக் கூட்டம் என்னவோ ஏர் இந்தியாவில்தான்.

கடைசியில் மற்ற ஏர்லைன்ஸ் அதிகாரிகள் அடங்கிய ஆய்வுக் குழு மாறு வேடம் பூண்டு ஏர் இந்தியாவில் பயணம் செய்தது.

ஒரு எக்ஸ்ட்ரா சௌகரியத்தையும் காணேம் என்று அலுத்துக் கொண்டபோது விமானப் பணிப் பெண் கொண்டு வந்தாள்—

சுடச் சுட இட்லி-சாம்பார்; தங்க நிறத் தில் மசாலா தோசை!

பாரத புத்திரர்கள் மட்டுமின்றி வெளி நாட்டினரும் விரும்பிச் சாப்பிட்டனர். பிர யாணிகளின் நெருக்கடி ரகசியம் புரிந்தது. ஆய்வுக் குழு இந்த அற்புதச்சிற்றுண்டியைத் தங்கள் விமானங்களிலும் வழங்க முடிவு செய்தது எனச் சொல்லவும் வேண்டுமோ!

-நிக் விஜயன்

# சிந்தையில் கள் விரும்பி...

சென்னை ரயில் நிலையத்தின் மூன்றாவது தாழ்வாரம். எஞ்சினிலிருந்து ஏழாவது பெட்டி. முதல் வகுப்பின் 'ஜி' கம்பார்ட்மெண்ட். வெள்ளைக் கால் சராயும், முழுக் கைச் சட்டையும் அணிந்த கண்டக்டர் சாளரத்தின் கம்பியில் பென்சிலால் தட்டி ஓசைப் படுத்தினார். நிலா முகமொன்று ஒளிர்ந்தது. 'மகேஸ்வரி பத்மநாபன்'. நிலவு முகம் பக்கவாட்டில் அசைந்தது. 'குமாரி புவனேஸ்வரி' ஆமாம். அவள் பதிலிறுத்தாள். பெயர்ப் பட்டியலில் குறியிட்டுவிட்டு அடுத்த பெட்டிக்கு நகர்ந்தார் கண்டக்டர்.

நான்கு பேர் பயணிக்க வேண்டிய அந்தப் பெட்டியில் புவனா மட்டும் இருந்தாள். மேல் பர்த்தில் ஒரு சக்கரம் வைத்த சூட்கேஸ், சிறிய கைப்பை, வாஸந்தின் நாவல்கள் இரண்டு. கைக்குட்டையினால் முகத்தைத் துடைத்தவாறு தனது கைப்பெட்டியைத் திறந்து தேடிய புவனாவுக்குப் பகீரென்றது. அந்த முக்கியமான கடிதத்தைக் காணோம். தனது வலது கையை உதறிக் கொண்டாள். அந்தக் காகிதத்தை ஒரு பாலிதீன் உறையிலிட்டுக் கைப் பெட்டியின் செருகுக்குள் வைத்த நினைவு இருந்தது அவளுக்கு. 'ஓ' இப்போது நினைவுக்கு வந்தது. அண்ணாசாலை வங்கியில் டிராவலர்ஸ் செக் மாற்றப்போனபோது அங்கே தன் தோழி ஜோதி சந்திராவைச் சந்தித்தாள். அவளிடம் அந்தக் கடிதத்தைக் காட்டினாள். திரும்பப் பெற்றுக் கொள்ள மறந்து விட்டாள். இப்போது என்ன செய்வது? தன் மணிக்கட்டை நோக்கினாள். சாளரத்தின் அருகில் நடந்த போர்ட்டரை விளித்து வினவினாள். ''ரயில் எத்தனை மணிக்குப் புறப்படும்?''

''சொல்ல முடியாதம்மா. இது விடுமுறை ஸ்பெஷல்.''

—கதவைப் பக்கவாட்டில் தள்ளித் திறந்து கொண்டு கிரிதரன் உள்ளே நுழைந்தான். அவனுடைய இடது கையில் தண்ணீர் நிறைந்த பாட்டில். ''இன்னும் ஏழு நிமிஷங்கள்'' — அவன் பதிலிறுத்தான். அவளுடைய பதற்றத்தைக் கண்டு அனுதாபத்துடன் வினவினான். ''ஏதாவது காணாமல் போய்விட்டதா?''

''ஒரு கடிதம், முக்கியமான கடிதம். என் தோழி ஜோதி சந்திராவிடம்... அவள் பஞ்சாப் நேஷனல் வங்கியில்.....''

ஒலிபெருக்கியில் குன்னக்குடியின் புன்னாகவராளி அறுந்தது..... 'யுவர் அட்டன்ஷன் ப்ளீஸ்'.... என்ஜின் கோளாறு காரணமாக மூன்றாவது தாழ்வாரத்திலிருந்து புறப்பட வேண்டிய விடுமுறை ஸ்பெஷல் அரை மணி தாமதமாக....''

கிரிதரன் விருட்டென்று எழுந்தான். ''பஞ்சாப் வங்கியின் டெலிபோன் எண் நினைவிருக்கிறதா?''

அவள் குறிப்பேட்டைப் புரட்டினாள். 86851.... ரங்கசாமி என்பவர் பிரதம அக்கவுண்டன்ட். மிகவும் கனிவாகப் பேசுவார்....'' குன்னக்குடி மீண்டும் விட்ட இடத்தில் தொடர்ந்தார். கிரிதரன் கீழே குதித்தான்.

ரயில் புறப்பட இரண்டே நிமிஷங்கள் இருக்கையில் அவன் மீண்டும் அந்தப் பெட்டியினுள் நுழைந்தான். அவனுடைய இடது கையில் அந்தப் பாலிதீன் உறை.

மிகுந்த நன்றி உணர்வுடன் அதைப் பெற்றுக் கொண்டாள் புவனேஸ்வரி. ''உங்களுக்கு மிகவும் சிரமம் கொடுத்து விட்டேன். இது என்னுடைய நியமனக் கடிதம்'' அவள் குழைந்தாள்.

''என் சிரமத்தை விடுங்கள். உங்கள் தோழி சந்திரா ஆட்டோவுக்காக அலைந்து... அந்த முச்சந்தியில் இந்த நேரத்துக்கு எதுவுமே கிடைக்காது. நான் போக வர டாக்ஸி பேசிக் கொண்டது நல்லதாகப் போய் விட்டது... இதென்னது? மற்ற இரண்டு பயணிகள் வரவேயில்லையா?'' என்று அவன் கேட்டபோது ரயில் பேசின் பிரிட்ஜைக் கடந்து கொண்டிருந்தது. அவன் மேல் பெர்த்திலிருந்த இர்விங் வாலஸைப் பிரித்தான்.

ரயில் ஒரு மணி நேரம் ஓடிய பிறகு அவள் தன் உணவுத் தூக்கைத் திறந்தாள். ''இது எங்கள் ஹாஸ்டல் தயாரிப்பு. நீங்கள் எப்படி ரசிப்பீர்களோ தெரியாது.'' அவள் தயங்கினாள்.

''வேண்டாம். நான் சாப்பாட்டுக்கு ஆர்டர் கொடுத்திருக்கிறேன். கூடூரில் வந்துவிடும். உங்களுக்குத் தண்ணீர் வேண்டுமா?''

''தேவையில்லை.'' பரோட்டாவைக் குருமாவில் தோய்த்தவாறே கூறினாள் புவனா. ''என்னிடம் வாட்டர்பாட்டில்இருக்கிறது.''

கூடூரில் அவனுக்கு உணவுத் தாலம் வந்தபோது அவள் சிறு துயிலில் ஆழ்ந்திருந்தாள். உண்டு முடிந்த பிறகு பின்னங் காலால் உணவுத் தட்டை இருக்கையினடியில் தள்ளினான் கிரிதரன். மின் விசிறி அனற் காற்றை வீசிற்று.

ரயில் விஜயவாடாவை அடைந்தபோது அவன் இரண்டு கிண்ணம் ஐஸ்கிரீம் வாங்கினான்.

கண்டக்டர் மாறினார்.

''நீங்கள் வடக்கே செல்வது இதுதான் முதல் தடவையா? கிரிதரன் ஆரஞ்சுப் பழத்தை உரித்தவாறே கேட்டான். நாகபுரியில் ஒரு கூடை ஆரஞ்சு வாங்கியிருந்தான் அவன்.

''ஆமாம். போபாலில் எங்கே தங்குவது என்றுகூட முடிவு செய்யவில்லை. என் தூரத்து உறவினர் ஒருவர், கர்னல் பரமசிவம் என்பது பெயர். கல்தானியா லேன்ஸ் என்று முகவரி. பாஷை வேறு தெரியாது.''

''உங்களுக்கு ஆட்சேபணை இல்லை என்றால் என் நண்பர் வீட்டில் இடம் தரச் சொல்கிறேன். பெரிய வீடு. வாசலில் தோட்டம். ஊஞ்சல். அண்மையில்தான் அவருக்குத் திருமணமாயிற்று. நானும் அதே காலனியில் குடியிருக்கிறேன். அடிக்கடி வந்து கவனித்துக்கொள்கிறேன்.''

ரயில் நீண்ட இருட் குகையினுள் செல்லும்போதெல்லாம் நீல விளக்கின் ஒளியில் அவள் அவனைப் பார்த்து நெட்டுயிர்த்தாள். அவனுடைய கண்களில் ஒளிர்ந்த பாவனை அவளுக்குத் தாற்காலிகத் தெம்பையும் நீடித்த நம்பிக்கையையும் தந்தன. தன் நெடும் வாழ்க்கைப் பயணத்துக்கு நிரந்தரமான துணை ஒன்று கிடைத்து விட்ட மாதிரியே அவளுக்குத் தோன்றியது.

—''முன்பு போபால் முஸ்லீம் நவாப் ஒருவரின் ஆளுகையில் இருந்தது. உள்ளூர் மக்கள் சுகவாசிகள். ஒரு வகையில் லோட்டஸ் ஈட்டர்ஸ். அது மத்தியப் பிரதேசத்தின் தலைநகரமாகுமென்று யாரும் எதிர்பார்க்கவில்லை. ஜபல்பூர்என்று மத்திய பிரதேசத்தில் இன்னொரு பெரிய நகரம். அதுதான் தலைநகராக ஆகும் என்று அனுமானித்த முன்னைய அரசியல் தியாகி ஒருவர் ஏகப்பட்ட நிலத்தை வாங்கினார். அதை அறிந்த நேரு பெரும் அதிர்ச்சிக்குள்ளானார். அவர் ஒரு பிறவிக் கனவான். தமது முடிவை மாற்றிக் கொண்டு போபால் தான் தலைநகர் என்று அறிவித்தார். ஜபல்பூர் மண்ணின் விலை திடீரென்று சரிந்தது. இழப்பின்



செய்தி அறிந்த அந்த அரசியல் தியாகி மூச்சு விட மறந்து போனார்!''

புவனேசுவரி இடி இடி என்று சிரித்தாள். அவளுடைய கன்னங்கள் அழகாகக் குழி வதையும் குழற் கற்றைகள் முன்னெற்றியில் தவழ்வதையும் நெஞ்சில் தேனூற ரசித்தான் கிரிதரன். அவன் தொடர்ந்து பேசினான்: ''பெரியபெரிய தலைவர்களின் சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமே இருப்பதில்லை. கருஞ் சந்தை, பதுக்கல், மோசடி. இந்த நாடு இவ்வளவு அநியாயத்தை எப்படித் தாங்கு கிறது என்பதே பெரு வியப்பு. நம்முடைய வீழ்ச்சிக்குக் காரணமே இந்தப் போலித் தனம்தான்.''

விநாயகர் எங்கே? மாம்பழம் கிடைக்காத முருகன் கோபித்துச் சென்று நின்றது பழனி. மாம்பழத்தைப் பெற்ற விநாயகர் குடிகொண்ட இடம் எது? சென்னையிலிருந்து 75 மைலில் உள்ள திருவலம்என்ற க்ஷேத்திரம்தான். — லலிதா செல்லப்பா

ரயில் பைரா கட்டத்தை அணுகிக்கொண்டிருந்தது. துவாலையுடன் அவள் குளியலறைக்குச் சென்றாள். திரும்பியபோது அந்தப் பெட்டியின் கதவு சற்றே திறந்திருந்தது. முதல் நாள் கூடூரில் அவனுக்கு உணவளித்த தாலத்தையும், கிண்ணங்களையும் எடுத்துச் செல்ல மறந்திருந்தான் பணியாள். அவற்றைப் பழைய பத்திரிகைக் காகிதத்தினால் துடைத்துத் தன் வி. ஐ. பி. பிரீஃப் கேஸில் போட்டு அழுத்தி மூடிக் கொண்டிருந்தான் கிரிதரன். அவள் மீண்டும் குளியலறையைத் திறந்துகொண்டு உள்ளே சென்றாள். நெஞ்சு கசந்து வந்தது.

அவர்கள் போபாலை அணுகியபோது கண்டக்டர் மீண்டும் எதிர்ப்பட்டார். அவரிடம் தன் டிக்கட்டை எடுத்துக் காட்டினாள் புவனா. ''தயை செய்து இதை டெல்லிவரை எக்ஸ்டெண்ட் செய்து விடுங்கள்'' அவள் ஆங்கிலத்தில் வேண்டிக் கொண்டாள்.

''என்னது? நீங்கள் இங்கே இறங்கவில்லையா?'' கிரிதரன் ஏமாற்றத்துடன் வினவினான்.

''இல்லை. நான் டெல்லிக்குப் போக முடிவு செய்து விட்டேன்.''. அவனுடைய பளபளத்த புதிய பெட்டியை நோக்கியவாறே விடையிறுத்தாள் புவனா.

---



# கருவறையிலிருந்து கல்லறை வரை!

பெங்களூரிலிருந்து வந்த சோனா கிரியேஷன்ஸ் சென்னையில் இரு நாடகங்களை வழங்கியது. இரண்டாம் நாள் நாடகம்: 'கருவறையிலிருந்து கல்லறை வரை'.

ஜெயிலரின் மகள் சாந்தா திருமணமான உடனே விதவைக் கோலம் பூண்டு வீட்டுக்கு வருகிறாள். கைதி சந்தானத்துடன் பழக்கம் ஏற்பட்டு, வயிற்றில் கரு வளர, ஜெயிலரின் ஆசாரமும் கௌரவமும் குறுக்கே நிற்க, சாந்தா விஷம் தின்று கல்லறை சேர, ஜெயிலர் பைத்தியமாகிறார்.

விதவையின் மறு மணத்துக்கு வாதாடுவதாகவே வைத்துக் கொண்டாலும், கதாநாயகி, கர்ப்பையும், தொடர்ந்து உயிரையும் இழப்பது நாடகத்தின் நயத்தை உயர்த்துவதாகத் தெரியவில்லை. ஜெயிலில் சித்தப்பிரமை யடைந்த வயதான கைதி ஒருவன் ஆண் பொம்மைக்கும் பெண் பொம்மைக்கும் திருமணம் செய்து பார்ப்பதும், ஆண் பொம்மையை இழப்பதும், கூட இருக்கும் கைதி வேறு ஆண்பொம்மையைக் கொடுத்துத் திருமணம் செய்து வைக்கச் சொல்வதும், வயதான கைதி சினம் கொண்டு பெண் பொம்மையை நசுக்கி வீசுவதும், ஒரே மேடையில் ஜெயிலரும் கைதியும் மாறி மாறி ஒரே நாடகத்தை வெவ்வேறு பாத்திரங்களில் செய்வது போலவே தோன்றுகிறது. ஒருவர் பாக்கியில்லாமல் எல்லாரும் உணர்ச்சி வசப்பட்டு நடிக்கிறார்கள்.

பெங்களூரிலிருந்து வந்த நாடகக் குழுவாயிற்றே, கார்னாடும் காரந்தும் இவர்களைப் பாதித்திருப்பார்கள் என்ற எதிர்பார்ப்பு பொய்த்தது. ஆனால் இவர்கள் எந்த வகை இன்னல்களையும் இன்முகத்துடன் ஏற்பது வெளிப்படையாகத் தெரிந்தது. இல்லாவிட்டால்—

இரண்டு நாள் நாடகம் நடத்த வந்த இந்தக் குழுவை நடிகர் சங்கத்தில் நாடகம் மட்டும்தான் போடலாம், தங்கவே கூடாது என்று ஈவிரக்கமின்றி நிர்வாகிகள் மறுத்தும் கூட, குழுவின் முப்பத்து மூன்று பேரும் வெவ்வேறு இடங்களில் தங்கி, நாடகங்களை நடத்தி முடித்திருப்பார்களா?

சென்னையிலிருந்து போகிற நாடகக் குழுவினரை விழுந்து விழுந்து உபசரித்துப் பழகிப் போன வெளியூர்க்காரர்களுக்கு, இது சற்று அதிர்ச்சியை அளித்திருக்கிறது. நடிகர் சங்கத்தில் நடிகர்களுக்குக் கூடச் சலுகை ஏதும் இல்லை போலும்!

—சாருகேசி

# வீட்டில் அனைவரின் கேசப் பராமரிப்புதானே? அதற்கு நம்பகமானது, விசேட ஃபேமிலி ஷாம்பூ பாமோலிவ்.



பாமோலிவ் ஷாம்பூ:
ரெகுலர், அல்லது
கூடுதலான
போஷாக்கிற்கு எக்




பாமோலிவ், எல்லா வகைக் கேசத்திற்கும் ஏற்ப விசேட முறையில் தயாரிக்கப்பட்டுள்ளது. அது, வளமையர்ன நவீன ஷாம்பூ, உங்கள் கேசத்தை நன்கு தூய்மை துலங்க வைக்கிறது. குழந்தைகளின் மென்மையான கேசத்திற்கோ மிகவும் ஏற்றது.

அது மட்டுமா? இவ்வகை ஷாம்பூக்களிலே சிக்கனமானது, பாமோலிவ் ஷாம்பூ—குடும்ப பட்ஜெட்டிற்கும் ஏற்றது.

**குடும்பத்தினர் கேசப் பராமரிப்புக்கு நேசமானது-உங்கள் பட்ஜெட்டிற்கும் ஏற்றது**

GK8E PS.7 TM

# விழா எடுப்போம் வாரீகளா?

கி.ராஜேந்திரன்

விழா எடுப்பதில் நம்மை மிஞ்ச உலகில் வேறு யாருமே கிடையாது. வள்ளுவர் விழா, கம்பன் விழா, பாரதி விழா என்று கவிஞர்களுக்கு விழா எடுப்போம்.

காந்திஜி விழா, காமராஜ் விழா, ராஜாஜி விழா, அம்பேத்கார் விழா என்று அரசியல் வாதிகளுக்கும் விழா நடத்துவோம்.

பொன் விழா, நூற்றாண்டு விழா, வெள்ளி விழா, மணி விழா எல்லாம் கொண்டாடுவோம்.

சுதந்திர தின விழா, குடியரசு விழா, கோயில் திருவிழா என்றால் கொண்டாட்டம் தான்!

அயல் நாட்டிலிருந்து ஒரு அமைச்சர் திரும்பி வந்தால் அவருக்கு வரவேற்பு விழா; ஒருவர் நூல் புத்தக உருப் பெற்ற உடனே வெளியீட்டு விழா!

ஒரு மனிதன் பிறந்து 25 வயது வாழ்ந்து விட்டால் அதற்காகவே நாம் வெள்ளி விழா கொண்டாடத் தயார்!

நமது விழா எடுக்கும் ஆர்வம் மேன்மேலும் சிறந்தோங்க வேண்டாமா? கால மாறுபாடுகளுக்கு ஏற்பச் சில புது தினுசு விழாக்களை அறிமுகப்படுத்தினால் என்ன?

## கோப்பு கிடைத்த விழா:

பிரதமர் வீட்டில் ஒரு கோப்பு காணாமல் போய்விடுகிறது. எலி இழுத்துக் கொண்டு போய் விட்டதா அல்லது திருட்டுப் போய் விட்டதா என்று ஏகப்பட்ட ஹேஷ்யங்கள்! கடைசியில் பிரதமரின் சிறப்பு உதவியாளர் சிறப்பாக அந்த ஃபைலை மட்டும் வேறு சில பழைய ஃபைல்களோடு சேர்த்துக் கட்டிப் போட்டு விட்டார் என்பது தெரிய வருகிறது. அது அவசர ஃபைல் என்பது ஒரு வருஷமாக அவருக்கு உறைக்கவில்லை. பிறகு தான் அவசரத்தை உணர்ந்து மூன்று மாதம் பகீரதப் பிரயத்தனம் செய்து தேடிக் கண்டு பிடித்து விடுகிறார்.

பதினைந்து மாதம் கழித்து ஒரு ஃபைல் கிடைத்த மகிழ்ச்சியை விழா எடுத்துக் கொண்டாடாமல் விடலாமா? அதைத் தொலைக்கவேண்டிய சமயத்தில் தொலைத்துக் கிடைக்க வேண்டிய தருணத்தில் கிடைக்கச் செய்த பிரதமரின் சிறப்பு உதவியாளருக்கு ''கோப்புக் காவலர்'' என்ற சிறப்பு விருது வழங்கிக் கௌரவிக்கலாமே!

## நஷ்டத் திலகம்:

விலையில் ஏற்றத் தாழ்வுகளுடன் கூடிய சர்வதேச மார்க்கெட் நிலவரத்துக்கு சம்பந்தமின்றி ஒரே விலை நிர்ணயித்து, குவோ ஆயில் நிறுவனத்திடம் ஒப்பந்தம் செய்துகொண்டு, அதன்படி பெட்ரோலியம் வாங்கியதால் பத்துக் கோடி நஷ்டம் என்று எதிர்க் கட்சியினர் அலறும்போது, இதனால் சற்றும் கலங்காத பெட்ரோலியம் அமைச்சர் சிவ்சங்கர், ''நஷ்டம் இதனால் மட்டும்தானா ஏற்பட்டது?'' என்று கேட்டு நம்மை அயர வைத்திருக்கிறார்! ''வேறு பல காண்ட்ராக்டுகளிலும் நஷ்டம்தான் ஏற்பட்டிருக்கிறது!'' என்று புரிய வைத்திருக்கிறார். ''சில நிறுவனங்கள் உலக மார்க்கெட் நிலவரப்படியே பெட்ரோலியம் சப்ளை செய்வதாகக் கூறி விட்டுப் பிறகு பின்வாங்கிவிடுகின்றன. அப்போதும் அவசரத்துக்குக் கூடுதல் விலை கொடுத்து வேறு இடத்தில் வாங்கி அரசு மக்களுக்கு நஷ்டம் ஏற்படுத்தத்தான் செய்கிறது. அவ்வாறிருக்க குவோ ஆயில் நிறுவனத்தால் மட்டும் நஷ்டம் என்றால் எப்படி நியாயமாகும்?''என்றுகேட்டிருக்கும் அமைச்சர் சிவ்சங்கருக்கு விழா எடுக்காமலிருப்பது பெரும் அநீதி அல்லவா? குறைந்தபட்சம் அவருக்கு மலர்க் கிரீடம் சூட்டி ''நஷ்ட திலகம்'' என்று பட்டம் வழங்குவோமே!

## சென்ஸார் வீழ்ச்சி விழா:

''தமிழகத் திரைப்படத் தொழிலைச் சமாதானப்படுத்துவதற்காக ஒரு சிறந்த சென்ஸார் அதிகாரிக்கு மாற்றல் உத்தரவு தருகிறேன்'' என்று கூறி கே. ஜி. ராமகிருஷ்ணனை பெங்களூருக்கு அனுப்பிவிட்ட தகவல் துறை அமைச்சர் வி. பி. சாத்தேக்குத் தமிழகத் திரை உலகம் மாபெரும் பாராட்டு விழா நடத்தத்தான் வேண்டும்.

மூன்று நாள் விழாவில் முதல் நாள், அமிதாப்பச்சனை ஆஸ்பத்திரிக்கு அனுப்பி அவசர ஆபரேஷனுக்கும் அவசியம் உண்டாக்கிய ஸ்டண்ட் மாஸ்டருக்கு அமைச்சர் வீரப்பன் தலைமையில் புகழாரங்கள் சூட்டி அவரைக் கொண்டே பண முடிப்பும் வழங்கிக் கௌரவிக்கலாம். அன்று காலை கருத்தரங்கில் ''வன்முறையால் விளையும் நன்மைகள்'' என்பது பற்றிப் பல அறிஞர்கள் சொற்பொழிவாற்றுவார்கள்.

இரண்டாம் நாள், ''சில்க்கு ஸ்மிதாவா? ஜெயமாலினியா? யார் அதிக செக்ஸி?'' என்று பட்டி மன்றம் நடத்தி, ரிகார்டு டான்ஸ்களுடன் நிகழ்ச்சிகளை முடிக்கலாம்.

மூன்றாம் நாள் ''வெட்டப்பட்ட காட்சிகள் வெட்ட வெளிச்சமாகின்றன'' என்ற










தலைப்பில் பலரைப் பேச அழைத்து, கடைசியில் அந்தக் காட்சிகளை ஆய்வு நோக்கில் திரையிட்டுக் காட்டலாம். இந்நிகழ்ச்சிக்குப் ''பதினாறு வயதுக்கு மேற்பட்டவர்களுக்கு அனுமதி இல்லை'' என்று அழைப்பிதழிலேயே அச்சடித்து விடலாம்.

## ஆட்சி நிலைத்த ஆனந்த விழா:

சட்ட மன்றத்தில் மிகப் பெரும்பான்மை பலம் பெற்றிருந்தும் பீகார் இ. காங்கிரஸ் அரசு ஒரு தீர்மானத்தின் மீது வோட்டெடுப்பின்போது தோற்றுப் போய்விட்டது. ''தோற்றாலும் ஆட்சியை விடமாட்டோம்'' என்று உறுதியாகக் கூறிவிட்டார் முதல்வர். இந்த வீர தீர பராக்கிரமத்துக்காக முதல்வர் மிச்ராவுக்கு விழா எடுத்துத் தங்கத்தாலான வீரவாள் வழங்கிப் பொன்னாடையும் போர்த்தலாம். அதே சமயம் சட்ட சபைக்கு வராமலிருந்து பெரும்பான்மை பலம் பெற்ற அரசு வீழ்ச்சியடைய உதவி, முதல்வரின் வீரச் சாதனைக்கு வழி வகுத்த இந்திரா காங்கிரஸ் எம். எல். ஏ.க்களை வரிசையாக மேடையேற்றி அவர்களுடைய பொறுப்புணர்வைப் பாராட்டி மலர் மாலைகள் அணிவித்துக் கௌரவிக்கலாம்.

## குழப்படி விழா:

லட்சியவாதியாகவும் அரசியல்வாதியாகவும் ஒருங்கே விளங்க நினைக்கும் ஒரே மனிதர் நாட்டில் இன்று எம். ஜி. ஆர். மட்டுமே! இரட்டை வேடம் போட்டுப் போட்டுப் பழகிய அவர், குதிரைப் பந்தயங்களில் நடக்கும் அநீதிகளைத் தடுப்பதற்காகவே குதிரைகளை ஓட அனுமதித்து வருகிறார்! கள்ளச் சாராயத்தை ஒழிப்பதற்காகவே கள்ளு சாராயக் கடைகளைத் திறந்து வைத்திருக்கிறார்! பொருளாதாரத்தில் பின் தங்கியவர்களுக்கு உதவுவதற்காகவே தாழ்த்தப்பட்டவர்களுக்கு இட ஒதுக்கீட்டை அதிகரித்திருக்கிறார்! இப்படிப் பல இரட்டை வேடங்கள் புனைந்து மக்களின் பேராதரவைப் பெற்றுள்ள புரட்சித் தலைவர், இப்போது ''சத்துணவுத் திட்டத்துக்காக லாட்டரி நடத்தப் போகிறேன்'' என்று மகத்தானதொரு அறிக்கை விட்டிருக்கிறார். இதற்காக அவருக்கு இரட்டை விழா எடுத்துச் சிறப்பிக்கலாம். இரு மேடைகள் முன்னும் அவரது நாலு ஆள் உயர கட்அவுட் வைத்து அவற்றை லாட்டரிச் சீட்டு மாலைகளால் அலங்கரிக்கலாம். ஒரு விழாவில் அமைச்சர் ஊட்ட, காமிரா க்ளிக் செய்ய, சத்துணவு உண்டு பசியாறும் பாலகன், உடனே பக்கத்திலேயே நடக்கும் மற்றொரு விழாவுக்குச் சென்று 'லாட்டரிச் சீட்டுக்களை விற்பது எப்படி' என்று பயிற்சி பெறலாம்:

''ஸார் ஸார்! நாளைக் குலுக்கல் ஸார்! பத்து லட்சம் ஸார்! தயவு செய்யுங்க ஸார்! ரெண்டு ரூபா சீட்டு வாங்கி என் வயித்துக்குச் சத்துணவு போடுங்க சார்!''

கதை: ரா. கணபதி | படக்கதை அமைப்பு: வாண்டுமாமா | சித்திரம்: விநு












ஒரு சமயம் பளிங்காசனத்தில் பார்வதி விநாயகரோடு அமர்ந்திருந்தாள். அப்போது கிம்புராசுரன் என்பவன் ஆசனத்தினுள் புகுந்து கொள்ள அது அவர்களோடு ஆகாயத்தில் பறக்கிறது.



உங்களைப்
போன்றவர்களை
திருப்தி செய்ய
சார்மினரால்தான்
முடியும்




சற்றே இளைப்பாறுவீர்! ஒரு சார்மினர் புகைப்பீர்

சிகரெட் குடித்தல் உடல் நலத்திற்குத் தீங்கானது

STATUTORY WARNING: CIGARETTE SMOKING IS INJURIOUS TO HEALTH

90 பைசாவுக்கு 10

CASVS-259-203 TAM

Main Dealer: M/s CONCORDE AGENCIES, Madras-600 006




● சென்னை ஷெனாய் நகர் பகுதியில் டாக்டர் ஹண்டே அவர்கள் வீட்டுக்குப் பக்கத்தில் தங்கும் வாய்ப்புக் கிடைத்தது.

சுகாதார அமைச்சர் வீடு இருக்கும் தெருவிலே நடுத் தெருவில் குப்பை கொட்டுவதும் ரோடு ஓரங்களில் மலம் கழிப்பதும், மாடுகள் கட்டுவதும் சர்வ சாதாரணமாக நடைபெறுவதைக் கண்டு மனம் பதறினேன்.

பம்பாய்-71 இளங்கோவன்

● சென்னைநகர பஸ்களில்ஆபீஸ் நேரங்களில் ஒரு நடத்துனரால் சமாளிக்க முடிவதில்லை. இதனால் நிரம்பப் பேர் ஓசிப் பயணம் செய்ய ஏதுவாகிறது. ஏதாவது ஒரு இடத்தில் டிக்கட் கொடுப்பதற்காக பஸ்ஸை நிறுத்த வேண்டியதாகிறது. அவசரமாக ஓரிடத்துக்குச் செல்கிறவர்களுக்குத் தொல்லை. இத்தகைய சிரமங்களைத் தவிர்க்க காலை, மாலை வேளைகளில் மட்டுமாவது இரு நடத்துனர்களை அரசு நியமிக்கலாமே. ஓசிப் பயணங்களைத் தடுப்பதே இவர்களுடைய ஊதியங்களை ஈடு செய்யும். வேலை வாய்ப்பும் அதிகரிக்கும்.

சென்னை-81 இரா. தங்கராசன்.

● சமீபத்தில் எங்கள் ஊரில் சுமார் 75 வயதான கோபாலய்யர் என்பவரை, இரவு 8 மணி அளவில் பார்ப்பனீயத்தின் விரோதிகள் சிலர் திடீரெனத் தாக்கினர். அந்நேரம் சாலையில் நடமாட்டம் இல்லை. மோட்டார் சைக்கிள் செயினால் விளாசியிருக்கிறார்கள். தலையில் பலத்த அடிக்கும் ஆளானார். அடித்துக் கீழே தள்ளிவிட்டு ஓடிவிட்டனர் வீரப் புலிகள்.

போலீசார் விரைந்தனர். கோபாலய்யரிடமிருந்து வாக்கு மூலம் வாங்கப்பட்டது. அவரை ஆஸ்பத்திரிக்கு எடுத்துச் சென்று முதலுதவி கொடுத்தனர். அங்கேயே இரவு தங்கச் சொல்லி விட்டார்கள்.

பக்கத்துக் கிராமத்திலிருந்து தினசரி வெண்ணெய் எடுத்து வந்து சிறிய வியாபாரம் செய்யும் அவருக்கு யாரும் விரோதிகள் இலர். அவருக்கே விளங்கவில்லை, மற்றவர்களுடைய கோபத்துக்கு ஏன் இலக்கானோம் என்று.

கோபாலய்யர் சொன்னார்: ''எனக்கு நேர்ந்த விபத்தைப் பற்றிக் கவலை இல்லை. ஆனால் என்னை அடித்து நொறுக்கிய இளைஞர்களுக்கு எந்தவித துன்பமும் நிகழக் கூடாது. அவர்களுக்காகப் பிரார்த்திக்கிறேன். அவர்கள் க்ஷேமமாக இருக்க வேண்டும்.''

பார்ப்பனீயம் என்றால் என்ன என்பது அப்போது புரிந்தது. திரு வீரமணியிடம் கேட்டுக் கொள்கிறோம். பார்ப்பனர்களின் விரோதியாயிருங்கள். ஆனால் பார்ப்பனீயத்தின் விரோதியாகாதீர்கள்!

மன்னார்குடி எஸ். கல்யாணராமன்

● முதல்வரின் சத்துணவுத் திட்டத்துக்கு நம்மால் இயன்ற உதவியைச் செய்யும் வாய்ப்புக் கிட்டாதா என ஏங்கிக்கொண்டிருந்தேன். உங்களின் இந்தத் திட்டம் என்போன்ற பலருடைய ஏக்கத்துக்கு வடிகாலாய் அமைந்திருக்கும் என நம்புகிறேன்.

சென்னை-81 எம். ராஜப்பா

● சத்துணவுத் திட்டத்தின் கீழ் (1) பள்ளிக்கூடங்களில் ஆசிரியர்களை சமையல் வேலைக்கு அரசு செலவில் ஓரிருவரை நியமிப்பது. இக்கூடங்களில் சமைக்கப்படும் உணவு பரவாயில்லை. (2) ஜெனரல் கிச்சனிலிருந்து (பொது சமையலறை) சமைக்கப்பட்டு வரும் உணவு. இவ்வுணவில் கல்லும் மண்ணும் ஏராளம்.

விருத்தாசலம் பொன். தங்கமலர்

● தமிழகத்துக்குத் தண்ணீர் தருவதில் கர்நாடக அரசு நடந்து கொண்ட மாறுபாடான போக்கை மிகவும் துல்லியமான முறையில் கார்ட்டூன் போட்டுத் தெளிவாக்கி விட்டீர்கள் ஸார்!

பாண்டமங்கலம், பூவை கே. சந்திரன்

● 'விடிவதற்குள் வா!' — கதை முடியுமுன் கொஞ்சம் மலையாளம் கற்றுக்கொள்ளலாம் போலிருக்கிறதே? கேரளத்து மண்ணும், பெண்ணும் சம்பந்தப்படுகிறார்கள். கல்கி தொடருக்குப் படம் வரைகிறோம் என்கிற நினைவு ஜெயராஜுக்கு இருந்தால் சரி!

செங்கவல்லி கி. முருகவேள்

● அளவுக்கு மீறினால் அமிர்தமும் விஷம் என்பது போல் அளவுக்கு மீறினால் எந்த வகை நட்பாக இருந்தாலும் அதன் முடிவு சோகம்தான் என்பதை மிக அழகாக 'நட்பு' நாவல் மூலம் சித்திரித்திருக்கிறார் சிவசங்கரி.

தாம்பத்திய உறவுக்குப் பங்கம் ஏற்படாமல் அதற்குப் பாலம் அமைத்துக் கொடுத்து விட்டு நட்பை இழக்கத் தயாராகும் எழுத்தாளர் பரந்தாமனின் பாத்திரம் நெஞ்சைத் தொடுகிறது.

கிருஷ்ணகிரி கி. சௌந்திரபாண்டியன்

● இன்று படித்த பட்டதாரிகூட சரியான வேலை கிடைக்காத கொடுமையால் சிறு தொழில், வர்த்தகமுதலாளிகளிடம் ஊமைச் சனங்களாக அடைபட்டுக் கிடக்கின்றனர். இன்றைய தலையாய இளைஞர் பிரச்னை கதைக்குப் பரிசு கொடுத்தது பொருத்தம்.

மதுரை-16 நாகு வேலன்

# ரவிகுல திலகன்

**செம்பியன்**

## 31

விஜயாலயனின் படையெடுப்பை எப்படியும் தடுத்து நிறுத்தி விடலாம் என்ற நம்பிக்கையுடன் வந்து ஏமாற்றத்துடன் திரும்பிய ஜெயசிங்கன் வியர்க்க விறுவிறுக்கத் தஞ்சைப் பெரு நகரின் அரச மாளிகையை அடைந்து திவாகரனைச் சந்தித்தான்.

''ரொம்ப முக்கியமான விஷயம் பேச வேண்டும். அவசரம். உத்தமசீலி எங்கே?''

திவாகரனின் புருவங்கள் நெரிய நெற்றி சுருங்கியது. ''அப்படி என்ன பரபரப்பு? நடன நிகழ்ச்சிக்கு இன்னும் நேரம் இருக்கிறதே. அவள் அலங்கரித்துக்கொண்டிருக்கிறாள்.''

''ஆபத்துக்குச் சமய சந்தர்ப்பம் பார்க்கத் தேவையில்லை. அவளை உடனே பார்க்கவேண்டும். வா, போகலாம்.''

''ஆபத்தா?''

''ஆமாம். அதை உனக்கு ஒரு முறை அவளுக்கு ஒரு முறை தனித் தனியே விவரிக்க அவகாசமில்லை. சீக்கிரம்!''



இதற்கு மேல் தாமதிக்காமல் திவாகரன் முன்னே நடக்க,ஜெயசிங்கன் பின் தொடர்ந்தான்.

அறைக் கதவைத் தட்டி அவசரமெனக் கூறித் திறக்கச் செய்தான் திவாகரன்.

பருவ எழிலில் தளதளத்த அவள் மேனி, நடனத்துக்கேற்ற உடையில் கவர்ச்சித் திரு உருவமாகக் காட்சி தந்தது. சாளரத்தின் வழியே வந்த மாலை நேர சூரியக் கிரணங்கள் அவளைத் தழுவி அவள் தகதகப்பிலிருந்து பொன்னொளி பெற்றுப் பிரகாசித்தன. தோள்களில் ஒரு தோழி சந்தனக் குழம்பால் தொய்யில் எழுத, இன்னொருத்தி பொன்னாபரணங்களை வாளிப்பான கைகளில் பூட்ட, வேறு ஒருத்தி முத்துச் சரங்களால் கொண்டையை அலங்கரிக்க, மற்றும் ஒருத்தி மரகத அட்டிகையை நிமிர்ந்தெழுந்த மார்பகங்கள் மீதாகத் தவழவிட, மயில் தோகை விசிறிகளால் இரு தோழிகள் காற்றோட்டம் உண்டாக்க, ஒரு பீடத்தின் மீது ரதி போல் அமர்ந்திருந்த அவள், புன்னகையுடன், ''வா அண்ணா! வாருங்கள் ஜெயசிங்கரே! அமர்ந்த நிலையிலேயே வரவேற்பதற்கு மன்னிக்க வேண்டும். இன்னும் சிறிது நேரத்துக்கு நான் இவர்களின் கைதி'' என்று தோழிகளைக் குறிப்பிட்டுக் கூறிக் கலகலவென்று சிரித்தவாறே பூச்சரமொன்றை அள்ளி எடுத்து அதன் அழகையும் மணத்தையும் அனுபவிக்கலானாள்.



''கலையரசி! உங்களுடைய இந்த உற்சாகத்தைக் குலைப்பதற்காக வந்திருக்கும் இந்தத் துரதிர்ஷ்டசாலியை மன்னிக்கவேண்டும்! தாங்கள் இங்கிருந்து உடனே தப்பிப் போய்விடுவது நல்லது. தஞ்சையைப் பேராபத்து சூழவிருக்கிறது!''

தோழிகள் திகைப்புடன் விலக, உத்தமசீலி அமைதியாக, ''இவர்களை அனுப்பி விடட்டுமா?'' என்றாள்.

''இன்னும் சற்று நேரத்தில் நகர மக்கள் அனைவருக்குமே தெரிய வரப்போகிற செய்தி தானே? விஜயாலயன் ஒரு பெரும் படையுடன் வந்து கொண்டிருக்கிறான்! அதிகபட்சம் போனால் மூன்று நாழிகை — அவன் படைகள் தஞ்சையைச் சூழ்ந்து தாக்குவது உறுதி. தாங்கள் உடனடியாகச் சந்திர லேகைக்குப் புறப்பட்டுச் செல்வது நலம்.''

பீதி அடைந்த தோழியர் ஒருவரை ஒருவர் நெருங்கி அதனால் ஏதோ பாதுகாப்புக் கிடைத்து விட்டது போல் நிற்க,

''என்ன உளறுகிறாய்?'' என்றாள் திவாகரன். ''இந்திர விழா கோலாகலத்தில் மிதமிஞ்சி மது அருந்தி விட்டாயா என்ன?''

''அண்ணா! இவர் அறிவு பூர்வமாகப் பேசுவதாகத்தான் தோன்றுகிறது.''

''இவன் அறிவு பூர்வமாகத்தான் பேசுகிறானென்றால் பழையாறையில் உள்ள பல்லவ மாதண்ட நாயகன் பாராசிரயன் முட்டாள்தனமாக நடந்து கொண்டிருப்பதாக அர்த்தம்! விஜயாலயனின் படையெடுப்பை அவர் வேடிக்கை பார்த்துக் கொண்டா இருந்திருப்பார்? நான் நம்பவில்லை.''

''திவாகரா! விஜயாலயன் ஏதேதோ தந்திரங்கள் செய்து பல்லவேந்திரரையும் அவரது மாதண்ட நாயகரையும் ஏமாற்றியிருக்கிறான். அதனால் அவர்கள் இதில் தலையிடாமல் ஒதுங்கி இருக்கிறார்கள்!''

''உங்களுக்கு எப்படித் தெரியும்?'' என்று கேட்டாள் உத்தமசீலி.

''ஏன், எப்படி என்றெல்லாம் கேட்காதீர்கள்! தயவு செய்து உடனடியாகப் புறப்படுங்கள்: சந்திரலேகை திரும்புங்கள்.''

''முத்தரையர் குலத்தில் பிறந்த யாருமே அஞ்சித் தப்பி ஓடுவது கிடையாது. இங்கே எமது எல்லைக் காவல் படை இருக்கிறது: எங்களுடன் வந்த மெய்க்காவல் படையும் இருக்கிறது.''

''இவர்களால் விஜயாலயனை அதிக காலம் எதிர்த்து நின்று தாக்குப்பிடிக்க முடியாது. தஞ்சைக் கோட்டை துரிதமாக வீழ்ந்து விடும்.''

''மறுபடியும் கேட்கிறேன், உங்களுக்கு எப்படித் தெரியும்?''

ஜெயசிங்கன் சற்றே தயங்க,

''தளபதியாரே! இவர் நடவடிக்கைகளை நான் கவனித்துத்தான் வருகிறேன்'' என்றான் திவாகரனின் மெய்க்காவலர் தலைவன். ''தஞ்சைக் கோட்டையை விட்டு வெளியேறி இப்போதுதான் திரும்பியிருக்கிறான். இவன் மேனியில் படிந்துள்ள புழுதியே என் சொற்களை மெய்ப்பிக்கும்.''

''ஆமாம். களைத்துத்தான் காணப்படுகிறான்!'' திவாகரன் ஜெயசிங்கனின் தோளைப் பற்றி உலுக்கினான். ''எங்கே சென்று வந்தாய்?'' என்று உறுமினான்.

ஜெயசிங்கன் தலை குனியவும்,

''விசாரிக்கிறபடி விசாரித்தால் பதில் கிடைக்காமலா போகும்? உத்தரவிடுங்கள் தளபதி!'' என்றான் அணுக்கப் பேரரையன்.

''தேவையில்லை!'' என்றாள் உத்தமசீலி. அதிகாரத் தொனியில். ''இவனைக் கைது செய்து இவன் மாளிகைக்கே அழைத்துச் செல்லுங்கள். பின்னாலேயே நானும் வருகிறேன்.''

அடுத்த அரை நாழிகைக்குள் பொறுக்கி எடுத்த இரு வீரர்களைச் சந்திரலேகைக்கு விரையுமாறு தூது அனுப்பி விட்டு, கோட்டைக் கதவுகளை அடைக்குமாறும் உத்தரவிட்டான் திவாகரன். எல்லைக் காவல் படையும் சந்திரலேகையிலிருந்து உடன் வந்திருந்த மெய்க்காவல் படையும் வடக்கு-கிழக்குக் கோட்டை வாசல்களைக் காக்க வேண்டுமெனக் கட்டளையிட்டான். நகர் முழுவதும் முரசு அறிவித்து, பெண்டிரைப் பாதுகாப்பாக இருக்கும்படி எச்சரிக்கவும் வேல் அல்லது வாள் பிடிக்கத் தெரிந்த ஆண் மக்களெல்லாம் வடக்குக் கோட்டை வாசலருகே ஒன்று திரளவும் ஆக்ஞாபித்தான்.

இதுபோன்ற மேலும் சில அவசரப் பணிகளைக் கவனித்த கையோடு அண்ணனும் தங்கையும் ஜெயசிங்கன் மாளிகைக்கு வந்து சேர்ந்தார்கள்.

அங்கு கைகள் இரும்புச் சங்கிலியால் பிணைக்கப்பட்ட நிலையில் இருந்த ஜெயசிங்கனைச் சினம் பொங்கப் பார்த்தாள் உத்தமசீலி. ''இவனை என் பின்னாலேயே இழுத்துக் கொண்டு வாருங்கள்!'' என்று உரத்த குரலில் கட்டளையிட்டு விட்டுச் சிற்ப ஓவியக் கூடத்துக்கு விரைந்தாள். ஒரு பக்கமாக மேடை மீதிருந்த வண்ணக் கலவைகள் நிரம்பிய தட்டையும் தூரிகையையும் எடுத்துக்கொண்டு நேரே விஜயாலயனின் ஓவியத்தை அணுகினாள். தூரிகையை வண்ணத்தில் தோய்த்து அந்த ஆளுயர ஓவியத்தின் மேல் சில கோடுகளை இழுத்தாள். வண்ணமும் பூசினாள். சில நொடிகளில் இளவரசன் விஜயாலயன் மறைந்து ஓர் அராபியன் உருவெடுத்தான்!

''ஆ!'' என்று வியந்தான் திவாகரன். ''அராபியக் குதிரை வியாபாரியாக வந்தவன் விஜயாலயனா!''

''இங்கே இந்தப் படத்தைப் பார்த்த போதே எனக்குச் சந்தேகம் தட்டியது அண்ணா! இவரை எங்கோ, எப்போதோ பார்த்த மாதிரி இருக்கிறதே என்று தோன்றியது. ஆனால் உறுதியாகத் தெரியவில்லை. சற்று முன் இவன் 'விஜயாலயன் படையெடுத்து வருகிறானென்று கூறவும் நமது அணுக்கப் பேரரையன் இவன் கோட்டைக்கு வெளியே சென்று திரும்பியதாகத் தெரியப்படுத்தவும் மின்னல் போல் ஓர் எண்ணம் பளிச்சிட்டது. நிச்சயப்படுத்திக்




## மலரும் நினைவுகள்

தேசிய சேவைத் திட்டத்தின் கீழ் கிராமங்களுக்குச் சென்று உழைப்பதைச் சில மாணவிகள் பொழுது போக்காகவும் வேறு சிலர் கடனே என்றும் நிறைவேற்றினாலும் குமாரி எஸ். வாசுகி போன்று அதை மிகத் தீவிரமாக எடுத்துக் கொண்டு மகிழ்வோரும் பலர் உண்டு.

அரசினர் பொது மருத்துவ மனையில் உதவுவதுடன் சென்னையின் சுற்றுப்புறக் கிராமங்களில் சுகாதாரம், கல்வி போதிப்பதில் வாசுகி மிகுந்த ஆர்வம் காட்டுகிறார்.

தமிழ் இலக்கியத்தில் அளப்பரிய ஈடுபாட்டுடன் அதனையே சிறப்புப் பாடமாக ஏற்று காயிதே மில்லத் அரசினர் மகளிர் கல்லூரியில் பி.ஏ., இரண்டாம் ஆண்டு படிக்கும் குமாரி வாசுகிக்கு பெயர்ப் பொருத்தம் இருப்பது சரி, கையிலே ஒரு மலர் வைத்துக் கொண்டிருக்கிறாரே எதற்கு?

சமூக சேவையில் மலரும் நினைவுகளை உணர்த்தவா? அல்லது தமிழ் மணத்தை நினைவூட்டவா?

**மேலட்டை வண்ணப்படம்:**

**ஏ. எஸ். அன்புக்கரசு**

## இந்த வார இலவச இணைப்பு

இந்த இதழ் நடுவில் உள்ள பின்களை நீக்கி எட்டுப் பக்கங்களைத் தனியே உருவி இரண்டாக மடித்து மையத்தில் ஒரு குண்டூசி பொருத்தினால் இலவச இணைப்பாகச் சிறு நூல் கிடைக்கும்:

| கௌரி கல்யாணம், வைபோகமே! |
|---|

திருமண மந்திரங்கள், சம்பிரதாயங்கள் ஆகியவற்றின் உட்பொருள்களும், சட்டபூர்வமான தகவல்களும்.

குடும்பத்தில் ஒவ்வொருவரும் படித்துப் பயனடைந்து பாதுகாக்க வேண்டிய பொக்கிஷம்.

| அடுத்த வாரம் இலவச இணைப்பு |
|---|

சிறு தொழில்கள் தொடங்க யோசனைகள்; கிடைக்கக்கூடிய பலவித உதவிகள்; முன்னேறுவதற்குரிய வாய்ப்புக்கள்; விநியோகம், விற்பனை குறித்து ஆலோசனைகள்:

| சிறுகக் கட்டிப் பெருக வாழலாம்! |
|---|

வேலையில் இருப்பவர்கள், இல்லாதவர்கள் ஆகிய எல்லோருக்கும் இன்று போல் என்றும் உதவக் கூடிய கையடக்கமான சிறு நூல்.



கொள்ளத்தான் இங்கு வந்து சித்திரத்தில் சில மாற்றங்கள் செய்தேன்!''

''ஜெயசிங்கா! உத்தமசீலியின் அனுமானம் சரிதானா? சற்று முன் நீ நகரை விட்டு வெளியேறிச் சந்தித்துத் திரும்பியது விஜயாலயனைத்தானா?''

''எழிலரசியின் அறிவாற்றலுக்குத் தலை வணங்குகிறேன். அந்த அறிவாற்றலுக்கே வேண்டுகோள் விடுக்கிறேன். சீக்கிரம் தப்பி ஓடிவிடுங்கள்!''

''சீச்சீ!''

''கலையரசி! அரச மாளிகையின் அந்தப்புரத்திலிருந்து கோட்டைக்கு வெளியே செல்ல ஒரு சுரங்கப் பாதை இருக்கிறது மறவாதீர்கள்!''

''அது எனக்குத் தெரியும். ஆனால் முத்தரையர் குலத்தோர் முயல் குட்டிகளல்ல என்பது உனக்குத் தெரியவில்லையே!''

''ஆத்திரமடைந்திருக்கும் விஜயாலயன் ஆபத்தானவன். நீங்கள் அவனை மறுத்து விட்டதாலும், ஏளனம் செய்து சிரித்ததாலும் அளவிட முடியாத கோபம் கொண்டிருக்கிறான்!''

''துரோகி!'' என்று கர்ஜித்துக்கொண்டே வாளை உருவினான் திவாகரன். ''விஜயாலயனுக்கு மட்டும்தான் ஆத்திரம் வருமா என்ன?''

''அண்ணா! நில்! நிதானி!'' என்று கூச்சலிட்டாள் உத்தமசீலி. ''கரங்கள் கட்டுண்டு நிற்பவனிடம் கருணை காட்டு!''

''பச்சைத் துரோகியிடம் என்ன பச்சாதாபம் வேண்டிக்கிடக்கிறது?'' என்று கேட்டபடியே வாளை வீசினான் திவாகரன்.

''வீல்'' என்று அலறினாள் உத்தமசீலி.

ஜெயசிங்கனின் தலை, வேல் முனையில் கோட்டை வாசலுக்குக் கொண்டு செல்லப்பட்டது.

''ஆகவமல்லா! நான் பெரிய தவறு செய்து விட்டேன். உன் பேச்சைக் கேட்டு நான் ஜெயசிங்கனைக் கைது செய்திருக்க வேண்டும். அவனைத் திரும்பிப் போக அனுமதித்தே இருக்கக் கூடாது'' என்று விசனத்துடன் குமுறினான் விஜயாலயன். ''என் ஆருயிர் நண்பன் துரோகி எனத் தீர்ப்புப் பெற்று மரண தண்டனையும் அடைய நானே காரணமாகி விட்டேன்!''

''பிரபோ! மனம் கலங்காதீர்கள். தஞ்சைக் கோட்டை நம் வசப்படு முன்னர் இன்னும் எத்தனையோ வீரர்கள் நம் தரப்பில் வீழ்ந்து மடிய நேரிடும். இதையெல்லாம் தவிர்க்க எண்ணினால் யுத்தம் நடத்த முடியுமா?''

''இது நான் தவிர்த்திருக்கக் கூடிய மரணம் ஆகவமல்லா! அதனால்தான் என் மனம் பதறுகிறது.''

''இளவரசே! இருவித நன்றி உணர்வுகளிடையே அலைபாய்கின்ற அவன் மனத்தைப் புரிந்து கொண்டு நீங்கள் நல்ல எண்ணத்தில்தான் அவனை விடுவித்தீர்கள். திவா

கரனையும் உத்தமசீலியையும் எச்சரிப்பதற்காகத் திரும்பிச் சென்றவன், சாதுர்யமாக நடந்து கொண்டிருந்தால் தானும் தப்பியிருக்கலாம்; அவர்களையும் காப்பாற்றியிருக்கலாம். வியாபார தந்திரங்களில் அவனுக்குள்ள ஆற்றல் அரசியல் தந்திரங்களில் இல்லை. அதற்கு நீங்களெப்படிப் பொறுப்பாக முடியும்? சமாதானமடையுங்கள்.''

''சமாதானமடைவதா!'' விஜயாலயனின் ஹுங்காரம் சிம்ம கர்ஜனையாக ஒலித்தது. ஜெயசிங்கனின் தலை, வேல் முனையில் உயர்ந்திருப்பதைக் காணக் காண அவன் அருவருப்பும் துக்கமும் ஆகுதியாக மாறி அவன் மனத்தில் குமுறிக் கொண்டிருந்த ஆத்திரத் தீயை மேலும் கொழுந்து விட்டெரியச் செய்தது.

''வெற்றி வேல்! வீரவேல்!'' என்று இடி முழக்கக் குரலில் தன் வீரர்களை ஊக்குவித்தான். ஆயிரமாயிரம் கண்டங்கள் அதே சொற்களை எதிரொலித்தன.

கரத்தை உயர்த்தி அசைக்கவும் அந்தச் சமிக்ஞையைப் புரிந்து கொண்ட முன்னணிப் படையினர் மிகக் கனமான பலகைகளைச் சுமந்து கொண்டு ஓடினர். கோட்டை மதில் மீதிருந்து பொழியும் அம்பு மழையை ஏய்ப்பதற்காக வளைந்து நெளிந்து ஓடிச் சென்று அகழி மீது தாற்காலிகப் பாலம் அமைத்தார்கள். அடுத்து வந்த யானைகள் பாலத்தைக் கடந்து சென்று கோட்டைக் கதவை முட்டி மோதின.

கதவு பிளக்கும்வரை காத்திராமல் வேறு பல வீரர்கள் கோட்டை வாசலின் இரு பக்கங்களிலும் நூலேணிகளை வீசினார்கள். அந்த நூலேணிகளின் நுனியில் பிணைத்திருந்த இரும்பினாலான முள் கொக்கிகளுக்குப் பிடிமானம் கிடைத்ததும் வீரர்கள் பரபரவென்று அதில் ஏற முற்பட்டார்கள். யானைகளின் பிளிறலும், குதிரைகளின் கனைப்பொலியும் கலந்து கேட்க, வேல்களால் தாக்குண்டும், அம்புகளால் துளையுண்டும் ரத்தம் பெருக்கி வீழ்ந்த வீரர்கள் எழுப்பிய மரண ஓலங்கள் காதில் விழா வண்ணம் அவற்றுக்கும் மேலாக மற்ற வீரர்கள் உரத்த குரலில், ''வீர வேல் வெற்றி வேல்!'' என்று ஆவேசமாகக் கூச்சலிட்டவாறே போர் புரிந்தார்கள். தங்களை அனுப்பிவிட்டுப் பின்தங்காமல் தங்களில் ஒருவனாக விஜயாலயன் முன்நின்று ஊக்கியது அவர்களுக்கு அளப்பரிய வீர உணர்ச்சியை ஊட்டியது.

அலை அலையாக முன்னேறிய வீரர்கள் வானர சேனை போல மதிலின் மீதேறி உள்ளே குதித்து உட்புறம் இருந்த எதிரிகளைத் தாக்கிக் கொன்றனர். அவர்களின் உடல்களை வெளியே அகழியில் வீசி எறிந்தனர். அகழி நீர் குருதி மிதக்கக் குழம்பிப் போயிற்று. ஆவேசத்தோடு போரிட்டு முன்னேறிய பலர் கோட்டைக் கதவின் உட்புறத் தாள்களை நீக்க விரைந்த அதே நேரத்தில் யானைகள் ஒன்றன் பின் ஒன்றாக மோதியதால் அக்கதவு இற்றுத் தகர்ந்து வீழ்ந்தது. உள்ளிருந்த விஜயாலயனின் வீரர்கள் தாங்க முடியாத உற்சாகத்துடன் ஆரவாரம் செய்ய அகழிப் பாலத்தைக் கடந்து குதிரைப் படை பாய்ந்து கோட்டையினுட் புகுந்தது. அவர்களிடையே விஜயாலயன் பரணி மீது ஆரோகணித்தவனாக 'ரவிகுல திலகன்' என்ற தன் பெயரை மெய்ப்பித்துக் கொண்டு கம்பீரமாகச் சென்றான்.

கோட்டை வசப்படு முன்னர் இருள் சூழ்ந்துவிடும் என்று எதிர்பார்த்தமையால் அனைவருக்கும் தீவட்டிகள் விநியோகமாகியிருந்தன. இப்போது கோட்டைக்கு உள்ளேயும் வெளியேயும் பல நூறு தீப்பந்தங்கள் ஏற்றப்பட்டன.

மருத்துவப் படையினரின் பணி ஆரம்பமாயிற்று. முதன் முதலாக ஒரு யுத்தத்தைப் பார்த்த குவலை பரபரப்படைந்திருந்தாலும் அதன் பின் விளைவைக் கண்டு சொல்லொணா வேதனையுற்றிருந்தாள். பகை வீரன், நம் வீரன் என்று பாராமல் காயமுற்று உயிருக்குப் போராடிய அனைவருக்கும் பணியாற்றினாள்.

கோட்டைக்குள் சென்ற விஜயாலயன் சரணடைந்த எதிரிகளின் ஆயுதங்களைப் பறித்து அவர்களைக் காவலில் வைத்தான். பின்னர் முதல் காரியமாக வேல் முனையில் செருகப்பட்டிருந்த நண்பனின் தலையைக் கீழே இறக்கினான். ''மரியாதைக் குரிய இவன் உடலைக் கண்டுபிடித்து எடுத்து வருபவருக்கு நூறு பொற்கழஞ்சுகள் பரிசு'' என அறிவித்தான்.

வீரர்கள் பலர் நாலாபுறமும் தேடச் சென்றனர்.

அவர்கள் அனைவருக்கும் முன்னதாக ஏற்கனவே விஜயாலயன் கூறியிருந்த அடையாளங்களை நினைவில் வைத்து அரச மாளிகையை நோக்கி விரைந்து கொண்டிருந்தான் சீனன். ''எது எப்படிப் போனாலும் சரி, உத்தமசீலிக்கு ஒரு தீங்கும் நேராமல் பத்திரமாகப் பாதுகாத்து என்னிடம் சேர்ப்பிக்க வேண்டியது உன் பணி'' என்ற விஜயாலயனின் கட்டளை அவனை இயக்கிக் கொண்டிருந்தது.

(தொடரும்)

# நாமே வளர்க்கும் நஞ்சு!

திருப்பூர் ஒரு கதம்பம்



'ஐந்து வருடங்களாக வேலை கிடைக்காத தால் ரயில் முன் பாய்ந்து இளைஞர் தற்கொலை!'

'வேலை வாங்கித் தருவதாகச் சொல்லிப் பட்டதாரி இளைஞரிடம் பத்தாயிரம் மோசடி.'

'நிரந்தர வேலையற்றோர் சங்கம் மதுரையில் நிர்மாணிப்பு!'

தினசரியைக் கையில் எடுத்தால் இப்படி ஏதேனும் ஒரு செய்தி இல்லாமல் இருக்காது. இந்த மாதிரி செய்திகளைப் படிக்கும் எவரும் ஒரு நிமிடம் நெஞ்சைப் பிழியும் வேதனையை அனுபவிக்காமல் இருக்க மாட்டார்கள். எனக்கோ, மையெழுத்தெல்லாம் போய்க்கண்ணில் நீர் தேங்கப் பார்க்கும் இளைஞனின் முகம்தான் தெரியும்.

இளமை!

இது மனிதனுக்கு எப்பேர்ப்பட்ட வரப் பிரசாதம்! சிறுவன் தன்னை இளைஞனாகப் பாவித்துக் கற்பனை செய்கிறான். முதியவர்கள் போய்விட்ட இளமையை நினைத்து ஒரு நாளைக்கு ஒரு முறையாவது பெருமூச்சு விடாமல் இருக்க மாட்டார்கள்.

உற்சாகம், துடிதுடிப்பு, கற்பனை, கவித்துவம், காதல்... இன்னும் எத்தனை எத்தனை மேன்மைகளோ... இவையெல்லாம் இளமைக்குச் சொந்தம்; இளைஞனுக்குச் சொந்தம். ஆனால் அத்தனையும் வற்றிப்போய், வாழ்க்கையில் வெறுப்புற்று, விரக்தியும் வேதனையுமாகித் தூக்குப் போட்டுச் சாகிறான் என்றால், அது எப்பேர்ப்பட்ட கொடுமை. நாட்டுக்கு எவ்வளவு பெரிய நஷ்டம்!

வேலை கிடைக்கவில்லை, எத்தனை காலம் தன் கனவுகள் நிறைவேறாமல் வாழ்வது என்ற வேதனையின் உச்சத்தில் கயிற்றைத் தேடலாம், ஸ்டேஷனுக்குப் புறப்படலாம், மருந்துக் கடையில் தூக்க மாத்திரைக்குப் பொய் சொல்லலாம்.

இந்த வேலையில்லாத் திண்டாட்டத்துக்கு ஆயிரம் காரணங்கள் இருக்கலாம்.

ஆனால் அவனுடைய இறப்புக்கு?

அந்தக் குடும்பம்தான் காரணம்!

ஆமாம், ஏற்கனவே நொந்து கிடக்கும் இளைஞனை மேலும் நையச் செய்வது அவனுடைய குடும்பம்தான். வேலையில்லாமல் தவிக்கும் ஒவ்வொரு இளைஞனும் படுகின்ற வேதனை கண்களில் குருதியைத் தெறிக்க வைக்கிறது.

படிக்க வைக்கிறோம். வீட்டில் கஷ்டம் தான். என் மகன் என்னைப் போலக் கஷ்டப் படாமல் அவனாவது படித்துப் பெரிய உத்தியோகத்துக்குப் போகட்டும் என்ற பெருந்தன்மைதான். இன்றைக்கு அப்படி மஞ்சளைத் தாலிக் கயிற்றில் முடிந்து கொண்டு விரதம் காக்கும் தாய்மார்கள் லட்சக் கணக்கில் இருக்கிறார்கள். அவர்கள் பாத தூளியைத் தலையில் தரிக்கலாம்.

ஆனால் இவர்களே பிற்காலத்தில் இளைஞர்களின் வேதனைக்கும் காரணமாகிறார்கள். எல்லாவற்றையும் விற்றுப் படிக்க வைத்தும் வேலை கிடைக்கவில்லை. கொஞ்ச நாளைக்குச் சும்மா இருக்கிறோம். அப்புறம் கோபம் வருகிறது.

''என்னடா, இண்டர்வியூவில் சரியாய் பதில் சொன்னியா? ராத்திரி பன்னிரண்டு மணி வரைக்கும் படிச்சு என்ன பிரயோஜனம். பயம்தான் உடம்பில்!''

அப்புறம் அதுவே அலட்சியமாகிறது.

''இரேண்டா ரவி, உனக்குக் குளியலுக்கு என்ன அவசரம்? எனக்கு ஆபீசுக்கு நேரமாச்சு!''

தோளில் துண்டுடன் விரையும் தங்கை.

இதுவே நாளாவட்டத்தில் வெறுப்பாக மாறுகிறது. ''ஆமாம், உன் பிள்ளைக்கு இந்த





ஜன்மத்தில் வேலே கிடைச்ச மாதிரிதான். அவன் எங்கே, ஒழுங்கா எங்கேயாச்சும் வேலே செய்யணும்னு இருந்தால்தானே! தலேய வெட்டிக்காம, ஃப்ரண்ட்ஸோட சுத்தறதும் வாரம் தப்பாமல் சினிமா பார்க்கிறதும்...''

ஆமாம், சில இளைஞர்கள் ஊர் சுற்ற ஆரம்பிக்கிறார்கள். சிலர் பார்க்கில் உட்கார்ந்து கொண்டு வானத்தைப் பார்க்கின்றனர். சில பாவிகள் பெற்றவர்கள் வயிற்றில் நெருப்பை அள்ளிக் கொட்டிவிட்டுப் பரலோகமே போகிறார்கள்.

இன்றைக்கு இந்தியாவில் லட்சக் கணக்கான இளைஞர்களின் நிலைமை இதுதான். குடும்பத்திலே ஒவ்வொரு அங்கத்தினரும் அந்த நுண்மையான இதயத்தைப் புரிந்து கொள்ள வேண்டும்.

வேலே கிடைக்காமல் போனதற்கு அவனு காரணம்? அவனே ஏன் புரிந்துகொள்ள மாட்டேன் என்கிறீர்கள்? தவறு அவன் மேல் மட்டுமல்லவே.

சின்ன வயதில் என்ன செய்தீர்கள், ஞாபகம் இருக்கிறதா?

மூணவது வயதில் அவன் 'பாபா ப்ளாக் ஷிப்' சொன்னபோது ஒரே சந்தோஷம். அவனேப் படிக்க வைக்க ஒரே ஆர்வம்.

''ஆமா சாமா சார், என்ன இப்போ? செலவுதான். ஆறது. என் குடும்பத்துக்குக் கட்டாதுதான். ஆனாலும் அந்தக் காலத்துல எங்கப்பா என்னே ஒரு டாக்டராவோ இன்ஜினியராகவோ ஆக்கியிருந்தா இவ்வளவு கஷ்டம் இருக்குமா? எஸ்.எஸ். எல். ஸி. முடிச்சுட்டு கவர்ன்மெண்டிலே யு. டி. ஸி.யா நாற்காலியைத் தேய்ச்சிண்டிருக்கேன். அவனே நான் டாக்டராகப் பார்க்கணும், என் கண் மூடறதுக்குள்ள.''

சபதம் எடுத்து விட்டார் அப்பா. இரண்டாவது வயசிலேயே எங்கேயாவது ரேடியோவில் வீணே இழைந்தால், செய்யும் குறும்புத்தனத்தை யெல்லாம் மறந்து மயங்கும் பாலகனே அவர் கவனிக்கவில்லே. பத்தாவது வயதில் வால்குடியிடம் காது கொடுக்கும் மகனின் காது திருகப்படும்.

''படியேண்டா படவா, நாளேக்கு டெஸ்ட் வச்சுண்டு என்ன பாட்டு?''

மூக்கை உறிஞ்சிக் கொண்டே அப்பாவின் உதைக்குப் பயந்து மகன் படிக்கிறுன். ஆத்மார்த்தமான சிரத்தை இல்லாத போது அறுநூறுக்கு அறுநூறு வாங்க முடியும்? அதனுல் மெடிகல் சீட் கிடைக்காமல், எங்கேயாவது கிடைத்தால் போதும் என்று ஏதோ ஒரு காலேஜில், ஏதோ ஒரு குருப்பில் சேர்ந்து, சிதைந்து...

''என் மகனே ஒரு வழியா எம். ஏ.க்குக் கொண்டு வந்துட்டேன்.''

மறு வருடம் அவன் எம்ப்ளாய்மெண்ட் எக்சேஞ்ஜ் வாசலேக் குத்தகைக்கு எடுக்கப் போகிறுன் என்ற விஷயம் அவருக்குத் தெரியாது.

''என் பிள்ளே ஒருத்தரை நிமிர்ந்துபார்க்க மாட்டான். அடுத்தாத்துல யார் குடியிருக்காங்கறது கூட அவனுக்குத்தெரியாது!''

இது அம்மாவின் பெருமை. இப்படி இருந்தால்தான் நல்ல பெயர் கிடைக்கும் என்ற போலித்தனம் உபதேசிக்கப்படும். இதனுல் இந்தச் சின்ன வளேயத்துக்குள்ளே முடங்கிப் புத்தகம் படிக்கும் மகன், ரோடிலே கொலே விழுந்தால் கூட சாட்சி சொல்லப் பயந்து ஒதுங்கிக்கொள்ளும் எதிர்காலப் பிரஜையாகிறுன்.

இவர்கள் எப்படி எதிர்காலத்தில் இவ்வளவு பெரிய ஜனசமுத்திரத்தில் முண்டியடித்துக் கொண்டு முன்னுக்கு வரப்போகிறுர்கள் என்று ஒரு நிமிடம் சிந்தித்துப் பார்த்தீர்களா? எந்தத் தன்னம்பிக்கையில் தனியாக வியாபாரம் ஆரம்பிப்பான்? யார் கொடுத்த தைரியத்தில் டெல்லிக்குப் போய் ஐ.ஏ.எஸ். தேர்வு அதிகாரிகள் முன் நிற்பான்?

இன்றைக்குப் படித்து வரும் இளைஞர்கள் அனைவருக்கும் வேலே இல்லே என்பது உண்மைதான். ஆனுல் பிழைக்க வழியில்லே என்று சொல்லிவிட முடியாது.

படித்து, பட்டம் பெற்று, கௌரவமான வேலே (White collar job) என்ற கனவுடன் நிற்கும் இளைஞர்களேத்தான் பாடத் திட்டம் வழியாக அரசாங்கமும், வீட்டு கௌரவம் என்றமுறையில்நமது குடும்பங்களும் தயார்ப் படுத்தி வைத்திருக்கின்றன.

முஷ்டியை உயர்த்தி எத்தனேயோ சாதிக்க வேண்டிய இளைஞன் இன்று நாடி தளர்ந்து நிற்கிறுன். இந்தக் கொடுமைக்கெல்லாம் காரணமானவர்களே பழித்தால் அந்தப் பாழும் உள்ளம் எங்கேதான் போகும்?

ஒரு நிமிஷம் சிந்தியுங்கள். போனது போகட்டும். இனியாவது அவர்களே அலட்சியப்படுத்தாதீர்கள். உற்சாகப்படுத்துங்கள். தவறுன பாதைக்குப் போயிருந்தாலும், உங்கள் அன்பான, ஆதரவான பேச்சினுல் அவர்களே உங்கள் வழிக்குக் கொண்டு வாருங்கள். ஒளி மயமான எதிர்காலத்தை அவர்கள் சமைத்துக் கொள்ள நீங்களும் சேர்ந்து பாடுபடுங்கள்.

— மஞ்சுளா ரமேஷ்

மனைவி: ''டெலிபோனேக் காதில் வைத்ததுமே முகத்தைச் சுளிக்கிறீங்களே... ஏதும் கெட்ட செய்தியா?''

கணவன்: ''ஊஹூம்! டெலிபோன் மேலே இருந்த ஒரு எறும்பு காதுக்குள் நுழைஞ்சுட்டது!''

—உ. ராஜாஜி



# கவர்ச்சிகள்

கிருஷ்ணமணி

23

"குறிப்பிட்ட எல்லேக்குள், ஒரு கால வரையறுப்பில் அடங்கிவிடும் மனித வாழ்க்கையின் காலத்தை யொட்டின சார்பும், எல்லேயற்ற பெருவெளியாக என்றுமே, மனிதனின் அநுமானத்திற்கும் கணிப்புக்கும் பிடிபடாமல் இருக்கும் காலத்தின் தன்மையும் எத்தனை விசித்திரமானது.

"நாம் இருவரும் நெருங்கிப் பழக ஆரம்பித்து ஒரு ஆண்டு காலம் ஓடிவிட்டது என்றால் உன்னால் நம்ப முடிகிறதா?" என்று கேட்டான் ராஜாமணி.

"உங்களுக்குத்தான் எப்பொழுது பார்த்தாலும் இலக்கியம் இல்லாவிட்டால் தத்துவம். ஆனால் எனக்கு எல்லாமே நீங்கள்தான் என்று ஆகிவிட்ட பிறகு, இந்த ஒரு வருஷத்தில் நடந்ததெல்லாமே எனக்கு மனத்தில் நன்றாகப் பதிந்திருக்கிறது. சாமியாராகப் போகிறவர் சம்சார பந்தத்துக்கு மனத்தை மாற்றிக் கொண்டு விட்ட பிறகும் தாமதம் ஏனோ என்றுதான் புரியமாட்டேனென்கிறது" என்றாள் சித்ரலேகா.

"ஏய்... ஏய்...."

"மாடு விரட்டறீங்களா?"

"ஜோக்கா?"

"இல்லே! பின்னே என்னவாம்! பீச்சுக்கு அழைச்சுக்கிட்டு வந்து பிலாஸபி பேசினா எப்படி இருக்குமாம்?"

"தமிழ் சினிமாவிலே வர்ற மாதிரி காதல் டூயட் பாடச் சொல்றியா?"

"போதுமே! தனிமையா இருக்கும்போது கூட பிலாஸபி பேசி அறுக்கணுமோ?"

"ஏய்....!"

"இன்னொரு தடவை அப்படிக் கூப்பிட்டீங்கன்னு கோபம் வரும்."

"என்ன செய்வே?"

"எழுந்து போயிடுவேன்!"

"போயேன்...!"

"நிஜம்மா!"

"நிஜம்மா!"

அவள் எழுந்து நடக்க ஆரம்பித்தாள்.

"சித்ரா!" கூப்பிட்டவாறே அவன் அவளைத் தொடர்ந்தான். சற்று வேகமாக நடக்க வேண்டியிருந்தது. செருப்புக்களைக் கழற்றிக் கையில் எடுத்துக் கொண்டு ஓடிப் போய் அவளைப் பற்றினான்.

மிதியடிகளுடன் அவனைப் பார்த்ததும் அவளுக்குச் சிரிப்பு வந்து விட்டது. ஆனால் அதை அடக்கிக் கொண்டாள்.

"சித்ரா டார்லிங்! கோபமா டியர்!"

"தமிழே பேச வராதோ! கொஞ்சணும்னுக்கூட இங்கிலீஷ்தானோ?"

"கலபமா வருது. தமிழ்லே சொல்லட்டுமா? கண்மணி!"

"போதும்!"

"உக்காரு."

"ம்....."

"ஐய! உக்காரு!". அவள் கையைப் பற்றி உட்கார வைத்தான்.

"சில விஷயங்களை உன்கிட்ட மனம் விட்டுப் பேசணும்னுதான் இங்கே அழைச்சிண்டு வந்தேன். பிலாஸபி இல்லேன்னு வாழ்க்கையே இல்லே! நாம வாழறதுக்குக் கூட ஒரு போக்கு, நிதானம்தேவைப்படறது. அதுகளைத்தான் நான் தர்க்க ரீதியா அலசிப் பார்த்து முடிவெடுக்கிறேன். காரண காரியம் இல்லாமல் சில சம்பவங்கள் ஏற்படும் பொழுதும் சரி, நாம எதிர்பார்த்ததுக்கு மாறாக, எதிர்மறையான விளைவுகள் சில சமயங்களிலே நேரும்போதும் சரி, ஏன் இப்படியெல்லாம் நடக்கணும்னு நம்ம மனசில் ஒரு தாக்குதல் ஏற்படுகிறது இல்லையா?"

"ம்...."

"உதாரணமா என் பிரெண்ட் முரளிதரனை எடுத்துப்போம். காதலிச்சவளை அவனால அடைய முடியல்லே. நல்ல குடும்பத்துப் பெண்ணை அவள்ஒரு சொளைட்டி

கால் கேர்ள் ஆக மாறிட்டா. அவன் ஆபீஸிலே வேலை பார்த்த ஹில்டா என்கிற பொண்ணு பட்டணத்து வாழ்க்கையை வெறுத்து, தான் காதலிச்சவனால ஏமாற்றப் பட்டதாலே துறவி மனப்பான்மையோடு ஊருக்கே போயிட்டா. அங்கே நர்ஸுக்குப் படிக்கிறாளாம். அவளுக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்ததாம். அதை ஆர்பனேஜிலே விட்டு வச்சிருக்காளாம்.''

''இப்போ எதுக்கு இதை யெல்லாம் பத்திப் பேசணும்?''

''அவசியம் ஏற்பட்டிருக்குன்னு நான் நினைக்கிறேன். கொஞ்சம் பொறுமையா இரேன்.''

''ம்.... சரி... சொல்லுங்கோ!''

''ஒரு ஆணுக்கும் பெண்ணுக்குமிடையே ஏற்படக் கூடிய கவர்ச்சி வெறும் உடலிச்சைங்கிற அளவிலே இருக்கும்போது அது எந்தச் சந்தர்ப்பத்திலேயும் முறிஞ்சிடலாம். பால் உணர்வு ஒன்று மட்டுமே காரணமா இருக்கும்போது, மனிதனும் மிருக நிலையிலேதான் இருக்கான். இல்லேன்னா முரளீதரனைக் காதலிச்ச ஹிரண்மயி இப்படி ஆகியிருக்கத் தேவையில்லே. ஹில்டா ஜான்ஸனை முரளீதரனுடைய சின்ன முதலாளி சுரேஷ் நிராகரிக்க வேண்டியதில்லே. இந்த விஷயங்



களை முரளீதரன் என்கிட்டச் சொன்ன போது என்னால முதல்லே ஜீரணிக்க முடியல்லே. உண்மையிலேயே ஒரு ஆணும் பெண்ணும் ஒருத்தரை மத்தவர் ஆத்மார்த்தமாக நேசிக்கிறாங்க என்று சொல்லும்போது அங்கே எந்தக் காலத்திலேயும் பிரிவினை ஏற்பட வாய்ப்பே இல்லே. மனித மனத் தோட போக்கே விசித்திரமா தான் இருக்கு.'' அவன் சற்று நிறுத்தி ஆகாயத்தைப் பார்த்துக்கொண்டிருந்தான்.

''ராஜாமணி! ஏன் நிறுத்திட்டீங்க?''

''இந்த ஆத்மார்த்தப் பிணைப்பிலே ஜென்ம ஜென்மமான ஒரு தொடர்பு ஏற்பட்டுப் போகுதுன்னு நான் உணர்கிறேன். சிலப்பதிகாரத்திலே வர்ற மாதவி கணிகையா இருந்திருக்கலாம். ஆனால் அவளுக்குக் கோவலனிடமிருந்த ஈடுபாடு, ஆழ்ந்த காதல் இதுகளை நினைச்சுப் பார்க்கும்போது, அவனுடைய மரணத்துக்குப் பிறகு துறவு பூண்ட நிலைமையிலே வாழ்ந்த அவளுடைய பரிசுத்தமான போக்கு இதெல்லாம் எதைக் காட்டுகிறது? ஒரு பெண்ணோ, ஆணோ பிறப்பினாலே மேன்மையடையல்லே. அவங்களுடைய வாழ்க்கைப் பண்பினாலே தான் சிறப்படையறாங்க என்கிறதைத்தானே? ஹில்டா என் கருத்திலே ஒரு மாடர்ன் மாதவி போலத்தான். சுரேஷ் உயிரோடு இருந்தும், அவளுக்கும் அவளுடைய குழந்தைக்கும் வாழ்வு இப்படித்தான் இருக்கணும்னு அவ தீர்மானிச்சிட்டா. எ மார்வலஸ் வுமன்!''

சித்ரா வியப்புடன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் பார்வையில் இப்பொழுது கனிவு மிகுந்திருந்தது. ஒரு இலட்சிய புருஷனை, வாழ்வின் கணிப்புக்களை, யதார்த்தமாக மதிப்பீடு செய்யும் ஒரு விவேகம் மிகுந்த பண்பாளனைத்தான் தன் வாழ்க்கைத் துணைவனாகத் தேர்ந்தெடுத்ததற்கு மகிழ்ந்தாள். மிகுந்த அன்புடன் அவன் கைகளை எடுத்துத் தன் கண்களில் ஒற்றிக் கொண்டாள். வானத்தில் வெண்ணிலவு பவனி வந்து கொண்டிருந்தது. ராஜாமணியின் கண்கள் ஆழ்ந்த அன்புடன் பிரகாசித்தன.

## 24

பெண்கள் மனத்தில் ஓர் ஆடவனிடம் அன்பு ஏற்பட்டு விடுமானால் அவனுக்காக எத்தகைய தியாகத்தையும் செய்யத் தயங்க மாட்டார்கள். மாறாக வெறுப்பும், பகையும் ஏற்பட்டு விடுமானால் அந்த ஆடவனைப் பழி வாங்கவும் தயங்க மாட்டார்கள்.

ஹிரண்மயி இதற்குத் தான் மட்டும் விலக்கல்ல என்பது போன்று, தன் மனத்தில் உருவான சங்கல்பத்துடன் ராமநாராயணன் அறைக்குள் பிரவேசித்தாள். பம்பாய் சேட் அவளழகில் கிறங்கிப் போயிருந்தான். அவள் உதவி என்று வாய் திறந்து கேட்டால் போதும், தன் சக்திக்குட்பட்ட எந்தக் காரியத்தையும் அவளுக்காகச் செய்யத் தயாராக இருந்தான். அவளுக்கு அவன் எழுதிய கடிதம் இதை ஊர்ஜிதப்படுத்திற்று. தான் எழுதிய கடிதத்துக்கு அவன் பதில் போட மாட்டான் என்று எண்ணி இருந்தவளுக்கு அது பெரும்ஆச்சரியமாக இருந்தது. அவனுடைய கடிதத்தில் என்றென்றும் அவளுடன் நட்புப் பாராட்டுவதற்காக அவன் விரும்புகிறான் என்றும், அவளுக்காக சமுதாய ரீதியாக ஓர் அந்தஸ்தைத் தர (அவள் அதைப் பெற விரும்பினால்) அவன் தயாராக இருக்கிறான் என்பதும் புலனாயிற்று. சொன்ன வார்த்தையினின்றும் அவன் மீற மாட்டான் என்பது அவளுக்குப் புரிந்தது.

'கம் இன் டியர்''-ராம் நாராயணன்! வியாபார அன்போடு அழைத்தார். தம் எதிரில் நிற்கும் அழகே உருவான அந்தப் பெண்ணைப் பார்த்தபோது தம்மை விட்டுப் போய்விட்ட இளமைக்காக அவர் ஏங்குவது போலிருந்தது.

கிழவர்: ''எனக்குச் சந்தேகமா இருக்கு!''

இளம் பெண்: ''என்ன சந்தேகம்?''

கிழவர்: ''என்பென்ஷனுக்கு ஆசைப்பட்டுத்தான் என்னை நீ காதலிக்கிறியோன்னு!''

—உ.. ராஜாஜி





கணவன்: இன்னிக்குக் காப்பி ரொம்ப நல்லா இருக்கே! என்ன விசேஷம்?

மனைவி: ஐயையோ! அது வேலைக்காரிக்கு வெச்சிருந்த காப்பி. நீங்க ஏன் அதை எடுத்தீங்க?''

—'சாம்பன்'

ஹிரண்மயி பதிலுக்கு வெகு நேர்த்தியாகப் புன்னகைத்தாள்.

அவளுடைய ஆளைக் கிறங்கடிக்கும் அந்தப் புன்னகை ராம நாராயணனை நிலை குலைய வைத்தது. 'உம்!' மென்று ஒரு பெருமூச்சின் மூலம் தம் தாபத்தை அவர் கொட்டினார். ஹிரண்மயி அவருடைய பார்வையின் பொருளைப் புரிந்து கொண்ட விதத்தில் சிரித்தாள்.

''என்ன விஷயம்?''

''நீங்க எனக்குக்கொடுத்த தொகைமிகவும் குறைவு.''

''பத்தாயிரம் கொடுத்தேனே! அது போருதா? அதைக் கணக்கிலே சரிக்கட்ட எவ்வளவு கஷ்டமா யிருக்கும் தெரியுமா?''

''உங்களுக்குக் கணக்கைச் சரிக்கட்டவே கஷ்டமா யிருக்கும்னு எனக்கு என் வாழ்க்கையைச் சரிக்கட்டறது எவ்வளவு சிரமம்?''

''நல்ல படிச்ச பையனாப் பார்த்து டவுரி கொடுத்துக் கல்யாணம் செய்துக்கோ. கல்யாணம் நிச்சயமானவுடனே சொல்லு. இன்னும் ஒரு அஞ்சாயிரம் தரேன்!''

''ஏன் டெல்லியிலிருந்து யாராவது மூல்தானி வராங்களா? இல்லே பஞ்சாப்வாலா யாராவது பிஸினஸ் தரேன்னு சொல்லியிருக்காளு?''

''என்ன ஹிரண்மயி இப்படிப் பேசறே?''

''அநுபவம் பேச வைக்கிறது!''

''நீ கெட்டிக்காரப் பொண்ணு பிழைக்கத் தெரிஞ்சவ.''

''நேர்மையான முறையிலே இல்லே!''

''நேர்மைக்கு இந்தக் காலத்திலே இடமிருக்கா?''

''மகாத்மா காந்தி பிறந்த தேசம் இது!''

''மகாத்மாக்களா எல்லாரும் மாறிட்டா வாழ்க்கை வெறிச்னு போயிடும். நாம சாதாரண மனிதர்கள். வாழ்க்கையிலே வீடு, வாகனம்னு வசதிகளைப் பெருக்கிக்கிறதும், சமுதாயத்திலே ஒரு அந்தஸ்து தேடிக்கிறதும்தான் நமக்கெல்லாம் லட்சியமா இருக்கணும். சொல்றேன் கேளு! நீயே நாளைக்கு ஒரு லெவல் வரைக்கும் வந்திட்டேனு வச்சுக்க. அப்பப்ப புரியும் இதெல்லாம். இன்னிக்கு சினிமா நடிகைகளை எடுத்துப்போம். அவங்க வாழ்க்கை வசதியுள்ளதா, செம்மையா இருக்கிறதுன்னு அதுக்கு என்ன காரணம்? தங்களுக்கு இயற்கை தந்திருக்கிற அழகை மூலதனமா வச்சுச் சம்பாதிக்கிறாங்க. யாரும் சமுதாயத்திலே அவங்களைக் கௌரவக் குறைவா நினைக்கிறதில்லே. மாறாக, அவங்களோட பேச, பழக விரும்பறாங்க. சினிமா ஸ்டாருங்க பெரிய பெரிய கம்பெனிகளிலே ஷேர் எடுக்கறாங்க. எஸ்டேட் வாங்கறாங்க. பங்களா, கார்னு ஐஸ்வரிய லோகத்திலே சஞ்சரிக்கிறாங்க. ஸோ! இன்னிக்கு இருக்கிற சொஸைட்டியிலேபணத்துக்குத்தான் மதிப்பு! இதைப் புரிஞ்சுக்கணும்.''

''கரெக்டா சொல்லிட்டீங்க ஸார்! என்னுடைய வாழ்க்கைக்கு இனிமேல் நீங்கதான் ஆதர்ஸ புருஷர். இந்த க்ஷணத்திலேயிருந்து நான் புது ஹிரண்மயி!'' என்று சொல்லிவிட்டு அவள் சிரித்தாள். (தொடரும்)

# அந்த ஏழு துணுக்குகள் எங்கே?

புதுகம்பாசிட்டர்! என்னசெய்வது? தகவல் துணுக்குகளைச் சரியான இடங்களில் போடும்படி சொன்னோம். வரிசைப்படுத்தியும் கொடுத்தோம். ஞாபக மறதிப் பேர்வழி அவர். கதை கட்டுரைகளுக்கு நடுவே நுழைத்து விட்டிருக்கிறார். இரண்டு படங்கள்—மேனகா, பொன்மணி வைர முத்து—இங்கே தங்கி விட்டன!

கொஞ்சம் சிரமத்தைப் பார்க்காமல் அந்த 7 துணுக்குகளைத் தேடிப் படித்துக் கொள்ளுங்களேன்.

நாங்கள் வரிசைப்படுத்திக் கம்பாஸிடரிடம் தந்த மாதிரியே நீங்களும் சரியாக வரிசைப் படுத்திக் கீழே உள்ள கூப்பனைப் பூர்த்தி செய்து அனுப்பினால் பரிசு ரூ. 100. ஒருவருக்கு மேல் சரியான விடை எழுதினால் குலுக்கல்தான்! முடிவு தேதி: ஆகஸ்டு 25. ''துணுக்கு வரிசை'' என்று உறை மீது தலைப்புத் தரவும்.

| வரிசை எண் | துணுக்குத் தலைப்பு |
|---|---|
| 1. | ........................ |
| 2. | ........................ |
| 3. | ........................ |
| 4. | ........................ |
| 5. | ........................ |
| 6. | ........................ |
| 7. | ........................ |

என் பெயர்:

கையெழுத்து:

விலாசம்:







# ஸனம் தேரி கஸம்

"கதையா? கமலஹாசனா?"

"கமலஹாசன்தான்" என்று ரீனாராய் சொன்ன மாதிரி கதை அமைந்துள்ளது.

வடநாட்டுக்காரர்களிடையே கமலுக்கு உள்ள வரவேற்பை அவரைப்பாடகனாக அறிமுகப்படுத்தும் முதல் காட்சியிலேயே காட்டியிருக்கிறார்கள்.

விட்டு விட்டுப் பெய்யும் அடைமழை மாதிரி கமலின் ஆடலும் பாடலுமே முக்கால் படம் வரை திரும்பத் திரும்ப வந்து மகிழ்ச்சியால் நனைய வைப்பது என்னவோ உண்மைதான். அதற்காகக் கதை வில்லன் ரஞ்சித்தின் தோற்றத்தைப் போல இத்தனை பழசாக அமைய வேண்டுமா?

ரீனாராயின் பிறந்த நாள் விழாவில் அவரது தந்தை மகளை வேறொருவனுக்கு மணம் முடித்துத் தருவதாக அறிவித்து விட்டு ஏமாற்றமடைந்த கமலையே பாட அழைப்பது....

திமிறிக்கொண்டு போன குதிரையின் மீது சவாரி செய்யும் ரீனாவை மோட்டார் சைக்கிளில் தொடர்ந்து சென்று கமல் காப்பாற்றுவது....

க்ளைமாக்ஸ் காட்சியில் கமலின் தாயாரை வளைத்துப் பிடித்துக் கொண்டு, "இவன் என் மகன் இல்லை" எனச் சொல்ல வைப்பது.....

இத்தகைய சம்பவங்கள் எல்லாம் இந்திக்குப் புதுசோ?

கமலும் ரீனாராயும் மோதிக் கொள்ளும் இடங்கள் சுவையானவை. என்றாலும் மோதலை ரசிக்க முடிந்த அளவுக்கு அவர்களது காதலை ரசிக்க முடியவில்லை. காரணம்: ஒப்புக்கொள்ள முடியாத ஜோடிப் பொருத்தம்தான்.

பிரம்மாண்டமான செட்டுகளும் காமிராவும் ஆர்.டி. பர்மனின் இசையும் மனத்தில் இடம் பிடித்த அளவு நரேந்திர மோடியின் டைரக்‌ஷனுக்கு இல்லைதான்.

கமலின் ஒரு பக்கத்தை மட்டும் பார்க்க முடிகிறது. மறு பக்கம்?

-நிரைஞானி

## சிந்தனைக்குச் சில....

காலி வயிற்றோடு எவனும் தேச பக்தனாக இருக்க இயலாது.

—டபிள்யூ. வி. பிரான்

தான் பிறந்த நாட்டை நேசிக்காதவன் எதையுமே நேசிக்க மாட்டான்.

—பைரன்

நாட்டுப் பற்று மட்டும் போதாது. நான் யார்மீதும் துவேஷமோ மனக் கசப்போ கொள்ளக் கூடாது.

—எடித் காவெல்

முட்டாளின் இதயம் அவன் வாயிலுள்ளது. ஆனால் அறிவாளியின் வாய் அவன் இதயத்தில் உள்ளது.

—பிராங்க்ளின்




# கடைசி முத்தம்



பல கோடி புரள்கிற ஒரு தனியார் நிறுவனத்தில் மானேஜர் அவர். பல்கலைக் கழகம் வழங்கும் பட்டங்களில் பலவற்றைத் தன் பெயருக்குப்பின்னால் இணைத்துள்ளவர் அவர் மனைவி. என் குடும்ப நண்பர்களான அவர்களிடம், '''கடைசி' என்ற வார்த்தையைக் கேட்கும்போது உங்கள் நினைவுக்கு வருவது என்ன?''என்று நான் சிரித்துக் கொண்டே கேட்டபோது எங்கோ வெறித்துப் பார்த்த அவர்.....

''கடைசியாக என் பிரியாவுக்குக் கொடுத்த முத்தம்தான் நினைவுக்கு வருகிறது''என்று கூற, ஏதோ காதல் விவகாரம் போலும் என நான் செவிகளைத் தீட்டிய போது அவர் விழிகளில் கண்ணீர்த் திட்டுகள்...

''ப்ரியா எங்களின் நான்காவது குழந்தை. முதல் மூன்றும் ஆணாக இருந்ததால் தனக்குப் பெண் குழந்தை வேண்டும் என ஒவ்வொரு ஞாயிற்றுக் கிழமையும் கர்த்தரிடம் வேண்டி நாங்கள் பெற்ற அவள்—தன் நான்காவது வயதில் — ஒரு ஞாயிற்றுக் கிழமை அன்று எங்களை விட்டுப் பிரிந்து விட்டாள்....''

அதிர்ச்சியுடன் அவரை நோக்குகிறேன்.

''அன்று ஞாயிறு... மகன்கள் சினிமாவுக்குச் சென்றுவிட வீட்டில் நான், என் மனைவி, ப்ரியா மட்டுமே. ஞாயிறு அன்று மத்தியானம் மூன்று மணிக்கு வானொலியில் ஒலிபரப்பாகும் ஒரு மணி நேர நாடகத்தைக் கேட்பதற்கு நானும் என் மனைவியும் தவறுவதில்லை. அவ்வாறு அன்று நாடகத்தை நாங்கள் கேட்டுக் கொண்டிருந்தபோது என்னை நோக்கி ஓடிவந்த ப்ரியா ''அப்பா நான் மாடிக்கு விளையாடப் போகட்டுமா?'' எனத் தன் மழலை மொழியில் கேட்டாள். பாத்ரூமுக்குச் செல்லும்போது கூட அவள் அனுமதி கேட்டுத்தான் செல்வாள். 'போயிட்டு வாம்மா' என்று நான் அனுமதி கொடுக்கும்போது என் கழுத்தில் தொங்கிக் கொண்டு என்னை முத்தமிடுவாள். அது போல் அவளுக்கு நானும் முத்தம் கொடுக்கவேண்டும் என்று வற்புறுத்துவாள். மாடிக்குச் செல்கிறேன் என அவள் கூறியதும் நான் அனுமதி வழங்க அவள் என்னை முத்தமிட— நானும் முத்தமிட்டு அனுப்பினேன். ஆனால் அதுவே நான் அவளுக்குக் கொடுக்கிற கடைசி முத்தம். என நான் கனவில்கூட நினைக்கவில்லை.''

''ஏன், ப்ரியாவுக்கு என்ன வாயிற்று?''

''துணிகள் உலர்த்தும் கம்பியைக் கட்டுவதற்காக மொட்டை மாடியில் எழுப்பப்பட்டிருந்த தூண் தலையில் விழுந்து ப்ரியா....''

''கட்டப்பட்ட தூண் எப்படி விழுந்தது?''

''சிலிண்டர் வடிவத்திலிருந்த அந்தத் தூணைப் பிடித்துக் கொண்டு சுற்றிச் சுற்றி வருவது ப்ரியாவின் பொழுது போக்கு. அதுபோல் அவள் சுற்றிவர தூண் அவள் தலையில் விழுந்து விட்டது.''

''அவளின் அலறல் கேட்கவில்லையா?''

''இல்லை... வானொலியின் ஒலியில் அவள் குரல் கேட்கவில்லை.''

''இறந்து கிடந்த ப்ரியாவை எப்போது முதலில் பார்த்தீர்கள்?''

''நாடகம் முடிந்த பிறகு அவளுக்கு மாலை டிபனாக 'பிரட் ஜாம்' எடுத்துக் கொண்டு ஊட்டிவிட மாடிக்குச் சென்றபோது மண்டை ஒடு சிதறிக் கிடந்த ப்ரியாவை.....''

குலுங்கிக் குலுங்கி அழுத அவர்,

''என் ப்ரியாவின் மரணத்துக்கு இந்த வீட்டைக் கட்டிய காண்ட்ராக்டர்தான் காரணம். காங்கிரீட் இட்டுக் கம்பிகளை நுழைத்துத் தூண் கட்டியதாக என்னிடம் கணக்குக் காட்டிய அவர் வெறும் செங்கற்களை அடுக்கித் தூண் கட்டிய துரோகம் என் மகள் மரணத்துக்குப் பிறகுதான் தெரிந்தது'' என்றார்.

''ப்ரியாவின் புகைப்படம் ஏதாவது...?''

''சாதனைக்குத்தான் புகைப்படம் வேண்டும்; வேதனைக்கு எதற்கு? என அவர் புகைப்படம் தர மறுக்க நான் புறப்படும்போது மனத்தில் ஒரு வினா...

''காலனே! நீ காண்ட்ராக்டர் உருவிலும் வருவதுண்டோ?

—ஏ. வி. எம். கணேஷ்

Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Ltd, at the Bharathan Press Race Course Road Guindy, Madras-600 032. (Phone: 431543)
Assistant Editor: P.S. Mani Layout Artist: Nambi Editor: K. Rajendran

# உங்கள் கேசம் அடர்த்தியின்றி சக்தியின்றி இருக்கிறதா? உங்கள் கேசத்தைப் பக்குவப்படுத்தி அழகையும் ஆரோக்கியத்தையும் அளிக்கிறது...



## செழுமையான புரதப்போஷாக்கு நிறைந்த
# ஹேலோ எக் ஷாம்பூ

ஊட்டம் குறைந்த நிலையில் உங்கள் கேசம் அடர்த்தியின்றியும், சக்தியின்றியும், ஆரோக்கியமின்றியும் காணப்படுகிறது.

பட்டுப்போன்ற, பொன் நிறமுள்ள வழவழப்பான ஹேலோ எக் ஷாம்பூ செழுமையான புரத ஊட்டம் நிறைந்த உத்தியின் மூலம் உங்கள் கேசத்தை சீராகப் படியவைத்து அதற்குத் தேவையான எல்லா ஊட்டங்களையும் அளிக்கிறது. உங்கள் கேசம் அழகாக ஆரோக்கியமாக, அடர்த்தியாகத் திகழ்கிறது.

ஹேலோ எக் ஷாம்பூவின் செழுமையான நுரைவளம் உங்கள் கேசத்தில் புகுந்து அதை பொலிவுடனும் தூய்மையான பளபளப்புடனும் திகழச் செய்கிறது.

**ஹேலோ எக் ஷாம்பூ...**

**அழகிய அடர்த்தியான ஆரோக்கியமான கேசத்திற்கு**



# காந்தமென அலங்காரம் கவர்ந்திழுக்க

சாந்தமுள்ள பொட்டிடுவீர் நெற்றியிலே.

கவிபாடுதே உங்கள்
கண்கள்... கவர்ச்சி காட்டுதே
ரோஜா இதழ்கள். கட்டழகு
மலருதே. நெற்றி கொண்ட
சிங்கார் குங்குமத்தால்.
சிங்கார்... உன்னத
பொருட்களால் உருவானது.
உங்கள் உள்ள நிலைக்கும்
உடை அழகுக்கும் ஏற்ற
வண்ணங்களிலே.



**சிங்கார்**

குங்குமப் பொட்டு
— இந்தியாவின்
ஒப்பற்ற
அழகுதிலகம்.

